# தமிழ் இலக்கிய வரலாறு

(ஓர் அறிமுகம்)

2800

எஸ். இராமகிருஷ்ணன்

என்சிபிஎச் பிரைவேட் லிமிடெட்
6, நல்லதம்பி செட்டித் தெரு
சென்னை-2.

NCBH

# பதிப்புரை

தமிழ் இலக்கிய வரலாற்றினை திரு. எஸ். இராமகிருஷ்ணன் அவர்கள் இந்நூலின் வாயிலாக நமக்கு சிறு அறிமுகம் செய்துள்ளார். சங்ககாலம் முதல் தற்காலம் வரை தமிழ் இலக்கியம் எவ்வாறு மலர்ந்து வளர்ந்துள்ளது என்பதை அறிய 'தமிழ் இலக்கிய வரலாறு' (ஓர் அறிமுகம்) எனும் இந்நூல் உதவிபுரியும் என்பதில் ஐயமில்லை.

இந்நூலை நாங்கள் வெளியிட வாய்ப்பளித்த ஆசிரியருக்கு எமது நன்றி உரியது.

பதிப்பகத்தார்.

## இந்நூலாசிரியரின் இலக்கிய நூல்கள் :

கம்பனும் மில்டனும்

சிறியன சிந்தியாதான்
(கம்பன் கண்ட வாலி)

வள்ளுவன் கண்ட வாழ்வியல்

கம்பன் கண்ட அரசியல்

கற்பின் கனலி

## ஆசிரியரின் மொழிபெயர்ப்பு நூல்கள் :

வீரம் விளைந்தது
(ஆஸ்டிராவ்ஸ்கி எழுதிய ரஷ்ய நாவல்)

சக்கரவர்த்தி பீட்டர்
(அலெக்ஸி டால்ஸ்டாய்
எழுதிய சரித்திர நாவல்)

ரசாயன மூலகங்கள்
(நெசேவ் எழுதிய விஞ்ஞான நூல்)

# முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றுத் துறை தெளிவுபெறும் நாட்களில் நாம் வாழ்கிறோம். புலவர்களைப்பற்றி வழிவழி வந்த கற்பிதக் கதைகளை நம்பத்தகுந்த செய்திகளிலிருந்து வேறு படுத்த முடியாது தவித்த நிலை பெரும்பாலும் மறைந்து விட்டது. வரலாற்று மாணாக்கனது அக்கறைக்குரிய செவி வழிச் செய்திகளையும் உண்மைகளையும் இனம் கண்டு கொள்ளும் திறன் பெருகிவருகிறது. வரலாற்றுக்குத் திட்டமான அடிப்படையாக விளங்குவது காலமுறை என்பதால், பெருங்கவிஞர்களது காலத்தைத் தீர்மானிக்கும் சிக்கலான பிரச்சினை, பல ஆராய்ச்சியாளரின் முழு கவனத்தையும் ஈர்த்தது. காலத்தைக் கணிக்கும் சிக்கல் தீர்ந்துவிட்டதென்று சொல்ல முடியாதென்றாலும், இலக்கிய வரலாறு இனியும் காலநிர்ணய விவாதமாக ஒடுங்கத் தேவையில்லை.

தனித்தனியாகக் கவிஞர்களைப் பற்றியும் நூல்களைப் பற்றியும் காலகட்டங்களைப்பற்றியும் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளிவந்துள்ள நூல்கள் பல. சில முழுமையான இலக்கிய வரலாற்று நூல்களும் பிரசுரமாகியுள்ளன. என் சிந்தனையைத் தூண்டுவதிலும் கருத்துக்களை உருவாக்குவதிலும் அவை வகித்த பாத்திரம் பெரிது. அவற்றில், மகரிஷி வ. வே. சு. ஐயர், ரஸிகமணி டி. கே. சி., பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை, சரித்திர மேதை நீலகண்ட சாஸ்திரியார், பன்மொழிப் புலவர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் ஆராய்ச்சிப் பேரறிஞர் சதாசிவ பண்டாரத்தார் ஆகியோரின் அருட்கொடைகளைச் சிறப்பாகக் குறிப்பிடவேண்டும்.

"உண்மையைவிட உயர்ந்ததொன்றில்லை" என்ற விழிப்பான உணர்வோடு தமிழிலக்கிய வரலாற்றை அறிமுகம் செய்வதற்கு இச்சிறு நூலில் முயன்றிருக்கிறேன். கடந்த பத்தாண்டுகளில் பல இலக்கிய மேடைகளில் நான் வெளி

யிட்ட கருத்துக்களே திருத்தம்பெற்றுக் கோர்வையாக இந் நூலில் வடிவெடுத்துள்ளன. அறிஞர் பலர் அப்போதைக் கப்போது என் கருத்துக்களை விமர்சித்து வழங்கிய நல்லுரை களுக்கு இந்நூல் பெரிதும் கடன்பட்டிருக்கிறது. அவர்களில் என் நீங்காத நினைவுக்குரிய அமரர் பால்நாடார் அவர்களையும், என் அன்புக்கும் நன்மதிப்புக்குமுரிய திருமிகு அ. சீனிவாச ராகவன், சா. கணேசன், ப. ஜீவானந்தம், கி. வா. ஜகந்நாதன், அ. ச. ஞானசம்பந்தன், ம. பொ. சிவஞானம் முதலியோரை யும் தனியே குறிப்பிடவேண்டும். இந்நூலில், இலக்கியங் களின் சிறப்பியல்புகளைச் சுருக்கமாகக் கூறுவதையே என் குறிக்கோளாக வகுத்துக்கொண்டேன். தவிர்க்க முடியாத போது, கால நிர்ணயம்பற்றிச் சில சொல்லியிருக்கிறேன்.

தமிழ் இலக்கிய வரலாற்றை அறிமுகம் செய்துவைப் பதில் இந்நூல் முழுவெற்றி எய்தியிருப்பதாக நான் கூறத் துணியேன். சங்ககாலக் கவிதைகளைப்பற்றியும் நாயன்மார் களது பாசுரங்களைப்பற்றியும் கம்பனது பெருங்காப்பியத் தைப் பற்றியும் அதிகமாகச் சொல்லியிருக்கவேண்டும் சித்தர் பலரைப்பற்றிச் சொல்லாது விடுத்தது ஒரு பெருங்குறை.

நம்மோடு வாழும் எழுத்தாளர்களது படைப்புக்களை விமர்சனம் செய்வதைக் கூடியமட்டிலும் தவிர்த்திருக்கிறேன் ; பொதுவான போக்குகளைச் சுட்டிக்காட்டுவதுடன் அமைந் திருக்கிறேன். இந்தச் சிறு நூலின் அமைப்புக்கு இதுவே ஏற்றமுறை என்பது என் கருத்து.

விரிவாகத் தமிழ் இலக்கிய சரித்திரத்தை எழுதவேண்டு மென்பது எனது நெடுநாளைய ஆசை. அது நிறைவு பெறு வதற்கு இச்சிறு நூல் முதற்படியாக அமைந்திருக்கிறதென்று நம்புகிறேன்.

இலக்கிய வரலாறு எழுதும் காரியம் மிகப்பெரிது. எனது திறமை சிறிது. ஆயினும் "அன்பெனும் நறவம் மாந்தி" "ஆசைபற்றி அறையலுற்றேன்." கொள்ளுவன கொண்டும், குற்றங்குறைகளைப் புலப்படுத்தியும், அறிவோடு பரிவும் பொருந்திய ஊக்கம் அளிக்கும்படி வாசகரை வேண்டுகிறேன்.

**எஸ். இராமகிருஷ்ணன்.**

# பொருளடக்கம்

# 1. தமிழின் தொன்மை

தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு, குடகம் ஆகிய திருந்திய மொழிகளும் வேறு ஆறு திருந்தா மொழிகளும் திராவிட மொழிகள் எனப்படும். இவற்றில் தமிழே தொன்மையானது.

பண்டைய நாட்களில் திராவிட மொழிகள் வடநாட்டிலும் பரவியிருந்தன என்பதற்குச் சான்றுகள் உள. வேதத்திலேயே திராவிடச் சொற்கள் இடம்பெற்றுள்ளன. மேலும், ஆரிய மொழிகளைப் பேசுவோருக்கிடையே, பலூசிஸ்தானத்தில், பிராஹூயி என்ற திராவிட மொழி பேசுவோர் வாழையடி வாழையாக வாழ்ந்துவருகின்றனர். இந்தியாவுக்கு ஆரியர் வந்தபோது, வடமேற்கு வட்டாரங்களில் திராவிட மொழிகள் வழக்கிலிருந்தன என்று பல ஆராய்ச்சியாளர் அனுமானிக்கின்றனர்.

## திராவிடரின் பூர்வீகம்

திராவிடர் இந்நாட்டின் ஆதி மக்களா அல்லது வெளிநாட்டிலிருந்து வந்தனரா என்பதைப்பற்றி உறுதியாக ஏதும் உரைப்பதற்கில்லை. அதேபோல், ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், சிந்துநதிப் பள்ளத்தாக்கில் சிறந்துவிளங்கிய நாகரிகத்தின் கர்த்தாக்கள் திராவிடரா

அல்லது வேறு இனத்தவரா என்பதைக் குறித்தும் எதையும் திட்டமாகச் சொல்வதற்கில்லை. சிந்துவெளி மக்களது எழுத்து புரியாத புதிராயுள்ளது. அதனை இனங் கண்டு பொருள்செய்வதில் அறிஞர் வெற்றி அடைந் தால், பல ஐயங்கள் நீங்குவதற்கு வாய்ப்பு ஏற்படலாம்.

ஆயினும், மேற்கு ஆசிய நாடுகளின் பூர்வீக மக்களுக்கும் திராவிட மக்களுக்குமிடையே அடிப்படை யான ஒற்றுமை இருந்ததென்று ஊகிக்க முடிகிறது. சின்ன ஆசியாவில் (ஆசியா மைனரில்) வாழ்ந்த லிஷியர் கள் 'தமிழர்' என்ற பெயரை ஒத்த 'தீரிம்மளி' என்ற பெயரால் தமது கல்வெட்டுக்களில் தம்மைக் குறிப்பிட் டுள்ளனர். நிப்பூர், அர், ஆஷூர் முதலான மேற்காசிய நகரப்பெயர்களும், ஆப்கானிஸ்தானத்திலும், ஈரானிலும் வழங்கிய சில பெயர்களும் திராவிடவடிவு பூண்டனவே. மிட்டானி, ஈலமைட்டு, காசைட்டு முதலிய மொழி களுக்கும் திராவிட மொழிகளுக்குமிடையே உயிர்த் தொடர்பு உள்ளது. இவையனைய சான்றுகளைக்கொண்டு, மேற்காசியாவில் வரலாற்று-முற்கால நாகரிகம் கண்ட பழங்குடிகள் திராவிடர்களே என்று பல ஆராய்ச்சியாளர் துணிவர். அது எவ்வாறுயினும், திராவிட மொழிகளது பண்டைய நிலையினை இவற்றிலிருந்து ஒருவாறு ஓர்ந்து கொள்ள இயலும்.

## வரலாற்று முற்காலத் தமிழர்

தென்னிந்தியாவில், தமிழர்களின் நாகரிகம் எப் போது தோன்றியது? வரையறுத்து விடையிறுக்க முடியாது. திருநெல்வேலி மாவட்டத்து ஆதிச்சநல்லூ ரில் கி. மு. 12-ஆம் நூற்றுண்டிற்குரியனவாகக் கருதப் பெறும் முதுமக்கள் தாழிகளைக் கண்டுபிடித்திருக்கிறுர் கள். இவற்றில் பொன்னில் செய்த தலைக்கட்டுக்களும் வாய்மூடிகளும் உள்ளன. முருகனுக்குக் காவடி எடுக்கும் அடியார்கள் துணியாலோ வேறு பொரு

ளாலோ வாயைமூடிக் கட்டுவது தொன்றுதொட்டு நின்று நிலேத்த தமிழர் வழக்கம். எனவே ஆதிச்சநல்லூர் வாய்மூடி, முருகவழிபாட்டுச் சின்னமே என்பது உறுதி. மேலும் முருகனின் ஆயுதமான வேல், இரும்புக்கொடிப் பட்டம், வெண்கலத்தில் உருவாக்கிய கோழிவடிவம் ஆகியவையும் ஆதிச்சநல்லூர் பிணக்குழிகளில் கிடைத்துள்ளன. இவையனைய பல சான்றுகளைக்கொண்டு, கிறிஸ்து பிறப்பதற்கு 1200 ஆண்டுக்கும் முன்பாகத் தமிழகத்தில் சமைந்திருந்த நாகரிகத்தின் சிறப்பையும் தமிழருக்கும் மேற்காசிய மக்களுக்குமிடையே வளர்ந்த வாணிகத்தையும்பற்றி ஆராய்ச்சியாளர்கள் ஒருவாறு அனுமானிக்கிருர்கள்.

புதைபொருள் சான்றுக்கு அடுத்ததாக உள்ளது, வடநாட்டு இலக்கியச் சான்ருகும். பாணினி இயற்றிய வடமொழி இலக்கணத்துக்கு விரிவுரை வழங்கியவர் காத்தியாயனர். கி. மு. 4-ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த காத்தியாயனர்: கேரள, சோழ, பாண்டிய நாடுகளைக் குறிப்பிடுகிருர். ''பாண்டு மரபினரது வழித்தோன்றல் அல்லது அம்மரபினரது நாட்டுக்கு அரசன்'' என்று பாண்டியன் என்ற சொல்லுக்குப் பொருள் தருகிருர்.* சோழர் என்ற சொல், சோழர் குலத்தினரையும் சோழ நாட்டரசரையும் குறிக்குமென்பார். சந்திரகுப்த மௌரியனுக்கு (கி. மு. 4 ஆம் நூ.) மதிமந்திரியாக விளங்கி, அர்த்த சாத்திரமும் அருளிய கௌடலியர் (சாணக்கியர்),

---

* பண்டு என்ற சொல்லிலிருந்து பிறந்த சொல் பாண்டியர். அது பண்டையர் என்று பொருள் தரும், என்றெல்லாம் விளக்கம் தருவது வீணே. பஞ்சபாண்டவர் மரபினராகப் பாண்டியர் கருதப்பட்டதாலேயே, ''பழியொடு படராப் பஞ்சவ வாழி'' என்று சிலப்பதிகாரம் செப்பும். பாண்டவரது குருகுலமே பாண்டியரது குலம் என்று வழங்கப்பெற்றதால், பாண்டியரைக் கவுரியர் என்று அகநானூறும் புறநானூறும் குறிப்பிடும்.

பாண்டிய நாட்டு முத்துக்களையும் பஞ்சாடைகளையும் பற்றி உயர்வாக மொழிகிறார் ; தென்னாட்டு வணிகத்தின் நன்மையைப் பெரிதும் பாராட்டுகிறார். ஹீராக்ளீஸ் தன் மகளான பாண்டியா*வைத் தென்னாட்டு அரசியாக்கினானென்றும், ஜுபிடரின் புண்ணிய ஸ்தலமான மேரு மலையினை† உடைய பாண்டிய நாட்டில் பெண்ணரசி

---

* ஹிராக்ளிஸ் என்பவன் கிரேக்கமாவீரன். மெகாஸ்தனிஸ் அவனது பெயரால் கிருஷ்ணனைக் குறிப்பிடுகிறானென்றே ஆராய்ச்சியாளர் கொள்வர். கிருஷ்ணனது யாதவ மரபினர் யமுனைக்கரை மதுரையிலிருந்து ஆண்டனர் என்பதும், வைகைக்கரைக் கூடல் நகருக்குப் பாண்டியர் மதுரை என்று பெயரிட்டனர் என்பதும் இங்குக் கருதத் தக்கவை. பாண்டியாவைப் பற்றி மெகாஸ்தனிஸ் மொழிந்ததை ஒத்தே பிளினியும் (கி. பி. முதல் நூற்.) பேசுவார். பாண்டியகுல முதல்வியே பின்னாளில் தெய்வமானாள் என்றும் அவளையே மதுராபதி (மதுரை அரசி) என்று சிலப்பதிகாரமும் மணிமேகலையும் சுட்டுகின்றன என்றும் ஆராய்ச்சிப் புலவர் வி. கனகசபை அவர்கள் அனுமானிக்கிறார்கள் ('1800 ஆண்டுக்கு முற்பட்ட தமிழர்' என்ற நூலில்). தன்னைப் பாண்டிய "குலமுதற் கிழத்தி"யாகவே மதுராபதித் தெய்வம் கண்ணகியிடம் அறிமுகம் செய்து கொள்கிறாள். அர்ஜுனனை மணந்த அல்லியாகவே மேற்சொன்ன பாண்டியாவைக் கொள்ளவேண்டும். ஆகக் கண்ணனது மகளும் அர்ஜுனனது மனைவியுமான பாண்டிமாதேவியே பாண்டியர் குல முதல்வி என்பதும் அவள் பின்னாளில் தெய்வமாக வழிபடப்பட்டாள் என்பதும் பழங்காலக் கதை மரபு என்போம்.

† ஜுபிடர் என்பது யவனரது தலைமைத் தேவன். இங்கு அப்பெயரால் மெகாஸ்தனிஸ் பரமசிவனையே குறிப்பிடுகிறான் எனலாம். கைலாயம் மேருமலையிலுள்ளது என்பது பிற்காலப் புராணம். மெகாஸ்தனிஸ் மேரு என்று பொதிய மலையைக் குறிப்பிடுகிறான் போலும். அகத்தியர் வாழ்ந்த இடம் பொதியமலை என்பது பண்டைய கதை மரபு, முற்கால அந்தணர்களது புண்ணிய யாத்திரையில் கங்கையிலும் காவிரி முகத்திலும் குமரிமுகத்திலும் நீராடுவதைப்போல் பொதிய

களே ஆள்கின்றனரென்றும், சந்திரகுப்தமௌரியனது அரசவையில் கிரேக்க தூதராக இருந்த மெகாஸ்தனீஸ் மொழிவான். அசோகன் தனது கல்வெட்டுகளில் சேர சோழ பாண்டியரைக் குறிப்பிடுகிறான். கி. மு. இரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் கலிங்கத்தை ஆண்ட காரவேலனது கல்வெட்டு, 113 ஆண்டாக நிலைத்திருந்த தமிழரசுகளது கூட்டணியைக் காரவேலன் அழித்ததாகக் குறிப்பிடுகிறது. ஆனால் இந்தக் கூட்டணியைப்பற்றி வேறுஎந்தச் செய்தியும் இல்லை.

இங்குக் கூறியவற்றால், கி.மு. நான்காம் நூற்றாண்டில் சேர சோழ பாண்டியர்கள் சிறப்புற்றிருந்தன ரென்று கருதலாம். ஆனால் அந்நாளில் தமிழ்மொழி இருந்த நிலையினைப் பற்றி ஒரு செய்தியுமில்லை.

மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களில் சில குகைகளில் காணப்பெறும் தமிழ்மொழிக் கல்வெட்டுக்கள் கி.மு. மூன்றும் நூற்றாண்டிற்குரியன. இவை தென்னாட்டுப் பிராமி எழுத்தில் பொறிக்கப்பெற்றுள்ளன. தென்னாட்டுப் பிராமி தமிழை எழுதுவதற்கு ஏற்றதாக உருவாகிக்கொண்டிருந்த நிலையினை அக்கல்வெட்டுக்கள் புலப்படுத்துகின்றன. உயிர்மெய்யெழுத்துக்குப் பதிலாக மெய்யெழுத்தை எழுதி அதனை அடுத்து உரிய உயிரெழுத்தைப் பயன்படுத்தியுள்ளனர் (ழி என்று எழுத ழ்இ என்று எழுதுவதைப்போல்). இதிலிருந்தே தமிழ் எழுத்து வர்க்கம் வளர்ந்திருக்கவேண்டுமென்றும், அவ்வாறு முதிர்ச்சி நிலை எய்திய தமிழை இரண்டாயிரமாண்டுக்கு முற்பட்டதாகக் கருதப்பெறும் சங்க இலக்கியங்களில் காணலாமென்றும் சில அறிஞர் கூறுவர். குகைகளது கல்வெட்டுக்கள் தமிழகம் போந்த வட

---

மலையினை வலம்வருவதும் சிறப்பாக இடம் பெற்றதென்பதைச் சிலப்பதிகார மாடலன் கூற்றால் (நீர்ப்படைக் காதை) அறியலாம்.

நாட்டுப் பௌத்தர் பொறித்தவை என்பதால், அவற்றைக்கொண்டு தமிழ் எழுத்து வளர்ச்சியின் காலமுறையைக் கணிப்பதற்கில்லை யென்று வேறு சிலர் கருதுவர். கி.மு. 12-ம் நூற்றாண்டிலிருந்து நாகரிக வாழ்வு நடத்தி வந்த தமிழர்கள் கிறிஸ்து பிறப்புக்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்பே தமிழ் எழுத்தும் இலக்கியமும் படைத்திருப்பர் என்று கருதுவது இயல்பே. முன்னர்த் தோன்றிய நூல்கள் மறைந்திருக்கலாம் என்று கொள்வதற்குத் தடையில்லை ; ஆனால் திட்டமான சான்று இல்லை.

## சங்கங்கள் மூன்று ?

முதற்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்ற மூன்று தமிழ்ச் சங்கங்கள் அடுத்தடுத்து அமைந்து தமிழ் நூல்களைப் படிக்கக் கேட்டுத் தீர்ப்புக் கூறின என்று கர்ண பரம்பரைச் செய்திகள் தெரிவிக்கின்றன. இவை முதன் முதலில் இறையனார் அகப்பொருள் உரையிலேயே (கி.பி. எட்டாம் நூற்றாண்டில் எழுந்தது) காணப்படுகின்றன, முதற்சங்கம் 4,440 ஆண்டுகளும் இடைச்சங்கம் 3,700 ஆண்டுகளும் கடைச்சங்கம் 1,850 ஆண்டுகளும் இருந்தன என்பர். முதற்சங்கத்தில் பரமசிவன், முருகன், குபேரன் முதலானவரும் பங்கு கொண்டனரென்பர். இவையெல்லாம் கற்பிதமே என்பது சொல்லாமலே விளங்கும். முதற்சங்கமும் இடைச்சங்கமும் லெமூரியாவில் இருந்தன என்றும் குமரி முனைக்குத் தெற்கில் பரந்துகிடந்த இந்தக் கண்டத்தைக் கடல் கொண்டுவிட்டது என்றும் கூறுவர். ஆனால் லெமூரியா அழிந்தபோதும் மனிதன் உலகில் தோன்றியிருக்க முடியாது என்பது புவி இயலார்கொண்ட முடிவு. பாரதப் போரில் இரு கட்சியினருக்கும் உணவளித்த மன்னன் என்று பெருஞ்சோற்று உதியன் சேரலாதனை முடிநாகராயர் புகழ்ந்து பாடும் பாட்டு புறநானூற்றில் உள்ளது (புறம் 2). முடிநாகராயர் முதற்சங்கப் புலவர் என்

பது கர்ண பரம்பரை வழக்கு. எனவே பாரதப்போர்க் காலமென்று கருதப்பெறும் கலியுகத் துவக்கத்தில் (கி.மு. 3102) முதற்சங்கம் இருந்ததென்று சிலர் வாதிப்பர். ஆனால் உதியன் சேரலாதன் கி.பி. முதல் நூற்றாண்டுக்குரியவன். வியாசர் பாரதத்திலும் இந்தக் கதைக்குச் சான்று இல்லை. எனவே சேரனது முன்னோரில் ஒருவனது பெருஞ் செயலைப் பற்றி வழிவழி வந்த கதையை, இரவலர்க்கு வரையாது வழங்கிய உதியன்மீது ஏற்றிப் பாடுவதாகவே—புகழ்ச்சி மரபாகவே—முடிநாகராயர் பாட்டைக் கொள்ளவேண்டும்.

கடைச்சங்கம் என்று கூறப்பெறும் சங்கம் ஒன்றே உண்மையில் இருந்ததென்று கொள்ளவேண்டும். கி.பி. பத்தாம் நூற்றாண்டிற்குரிய சின்னமனூர்ச் சாசனம் பாண்டியரது வம்ச வரலாற்றை விவரிக்கிறது; "மதுராபுரிச் சங்கம் வைத்தும்" என்று மட்டுமே அது குறிப்பிடுகிறது; முதலிடைச் சங்கங்களைப் பற்றி ஒன்றும் குறிக்கவில்லை. கடல்கொண்ட லெமூரியா, அங்குத் தென் மதுரையில் முதற்சங்கம் பேணிய பாண்டியர், கபடாபுரத்தில் இடைச்சங்கம் புரந்த பாண்டியர் முதலானவற்றைப் பற்றிய குறிப்பு அதனுள் இல்லை.

கடைச்சங்கம் என்று குறிப்பிடப்பெறும் சங்கம் இருந்ததென்பதற்கு இலக்கியச் சான்றுகள் உள. 'சங்கத் தமிழ்' என்று ஆண்டாளும், "சங்கமுகத்தமிழ்" என்று திருமங்கையாழ்வாரும்.

நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி நற்கனகக்
கிழிதருமிக் கருளினேன் காண்

என்று நாவுக்கரசரும் சங்கத்தைப் பற்றிய நினைவைப் போற்றுகின்றனர்.

ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவனாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகஎன் நிலவரை

என்று பாண்டியன் நெடுஞ்செழியன் தன் வஞ்சினப் பாட்டில் (புறம்-72) கூறுவதால், அவன் காலத்தில் மாங்குடி மருதனைத் தலைவனாகக் கொண்ட புலவர் அவை இருந்ததென்று அனுமானிக்கலாம்.

## சங்க கால வரையறை

தமிழ் அரசுகட்கும் யவனர்கட்கும் (கிரேக்கர், ரோமானியர்) இடையே இருந்த வணிக உறவுகளைப் பற்றிச் சங்கச் செய்யுட்களில் உள்ள குறிப்புக்களை கி. பி. முதல் நூற்றாண்டுக்குரிய பெரிப்ளுஸ் என்ற நூலின் செய்திகள் உறுதிப்படுத்துகின்றன. கி.பி. முதல் நூற்றாண்டுக்குரிய ரோமானிய நாணயங்கள் தமிழ்நாட்டில் கண்டு பிடிக்கப்பட்டிருப்பதும் குறிப்பிடத் தக்கது. இவற்றை யெல்லாம் கருதிச் சங்க நூல்களின் காலத்தைத் தோராயமாகக் கி.பி. முதல் மூன்று நூற்றாண்டுகள் என்று ஆராய்ச்சியாளர் கணிப்பர். சில சங்கச் செய்யுட்கள் இதற்கு முற்பட்ட காலத்துக்குரியன என்றும் சிலர் கொள்வர்.

பதிற்றுப் பத்தில் ஐந்தாம் பத்தில் பாடப்பெறும் சேரன் செங்குட்டுவனும் ஈழத்து வேந்தனான முதலாம் கயவாகுவும் (கஜபாகு) சமகாலத்தவர் என்ற செவிவழிச் செய்தியைப் பின்னாளில் தோன்றிய சிலப்பதிகாரத்தில் காண்கிறோம். சிலப்பதிகாரம் வரலாற்று நினைவைப் பிசகற்ற முறையில் போற்றுவதாகவே அறிஞர் கருதுவர். முதலாம் கயவாகு கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதியின் வாழ்ந்தவன் என்பது கொண்டு, கி.பி. முதல் மூன்று நூற்றாண்டுகளே சங்ககாலம் என்பதை உறுதிப் படுத்தலாம்.

எனவே, தமிழ் இலக்கிய வரலாறு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே தொடங்கியது என்று துணிவோம்.

## 2. சங்க காலம் (கி.மு. 50-கி.பி. 300)

சங்க காலத்தில் தோன்றிய கவிதைகளை எட்டுத் தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றில் காண்கிறோம். இவையன்றி வேறு நூல்கள் தோன்றி விளங்கிப் பின்னர் பல்வேறு காரணங்களால் மறைந்தன. எடுத்துக்காட்டாக, இலக்கிய வகைகளில் ஒன்றாகத் தொல்காப்பியரால் குறிப்பிடப்பெறும் பண்ணத்தி என்பதற்குரிய இலக்கியம் ஏதும் இன்று இல்லாத நிலையைக் குறிப்பிடலாம். முற்காலப் பாண்டியர் மகாபாரதத்தைத் தமிழில் ஆக்கச் செய்தனர் என்று சின்னமனூர்ச் சாசனம் குறிப்பிடுகிறது. ஆனால் சங்ககாலத்தில் பாடப்பெற்ற பாரதம் நமக்குக் கிடைக்கவில்லை.

### அகமும் புறமும்

எட்டுத் தொகை என்பது எட்டுத் தொகை நூல்களைக் குறிக்கும். அவை குறுந்தொகை, நற்றிணை, ஐங்குறு நூறு, கலித்தொகை, அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல் என்பன. இவற்றில் முதல் ஐந்தும் காதலைப் பற்றியவை; இவை அகத்திணை நூல்கள் எனப்படும். குறிஞ்சி அல்லது திருமணத்திற்கு முற்பட்ட காதல்; முல்லை அல்லது பிரிந்து சென்ற கணவனை எதிர்பார்த்து இல்லத்தில் காத்திருக்கும் மனைவியின் துன்பம்; மருதம் அல்லது பரத்தையரை நாடிச் சென்ற

கணவன்பால் மனைவியின் ஊடல்; நெய்தல் அல்லது சேய்மையிற் பிரிவால் காதலர் இரங்கிப் புலம்பல்; பாலை அல்லது பொருள் வயிற் பிரிவால் காதலர் அனுபவிக்கும் வேதனை என்பன அன்பின் ஐந்திணைகளாம். இன்ப நுகர்ச்சிக்குரிய இரு பாலாருள் ஒருவரிடம்மட்டும் தோன்றும் உணர்ச்சியான ஒருதலைக் காமத்தைக் கைக்கிளை என்பர். ஒத்த அன்பின்றி மிகுந்தும் குறைந்தும் உள்ள அன்புடையார் கூடும் ஒழுக்கம் பெருந்திணை என்பர். அன்பு முதலியவற்றால் ஒத்த ஒருவனும் ஒருத்தியும் அடுப்பாரும் கொடுப்பாருமின்றித் தாமே எதிர்ப்பட்டுக் கூடும் கூட்டத்துக்குரிய ஐந்திணையும், கைக்கிளை பெருந்திணை என்ற இழிந்த ஒழுக்கங்களும் அகப்பொருளில் அடங்கும்.

புறநானூறும் பதிற்றுப்பத்தும் புறத்திணை நூல்களாகும். இவை வீரம், கொடை முதலியவற்றைப் பொருளாகக் கொண்டவை. வெட்சி அல்லது ஆயர் ஊரில் புகுந்து அவர்தம் பசுக்களைக் கவர்தல்; கரந்தை அல்லது அவ்வாறு பறிகொடுத்த பசுக்களை மீட்டல்; வஞ்சி அல்லது பகைவர்மேல் படையெடுத்துச் செல்லுதல்; காஞ்சி அல்லது அப்படையெடுப்பை எதிர்த்து நிற்றல்; உழிஞை அல்லது பகைவன் ஊர்மதிலை வளைத்தல்; நொச்சி அல்லது முற்றுகைக்கு எதிராக மதில்காத்து நிற்றல்; தும்பை அல்லது இருதரப்பினரும் களத்தில் பொருதல்; வாகை அல்லது அப்போரில் வெற்றிபெறுதல்; இவை புறத்திணைகளாம். தலைவனது வீரத்தையும் கொடையையும் புகழ்வதான பாடாண் திணையும் புறத்திணையாகும். பெரும்பாலான புறநானூற்றுப் பாட்டுகளுக்கு இந்த பழைய இலக்கணமே பொருந்துவதாகும். தொல்காப்பியரது புறப்பொருளிலக்கணம் இதிலிருந்து ஓரளவு மாறுபட்டதாகும்.

பரிபாடல் என்ற தொகைநூல் அகம், புறம் இரண்டுக்கும் உரியது. இதுவும் கலித்தொகையும் சங்க

காலத்தை அடுத்துத் தோன்றின வென்பது, சொல்லாட்சி, யாப்பமைதி, கருத்துப்போக்கு முதலியவற்றை எண்ணி அறிஞர் கொண்ட முடிவு.

## பத்துப்பாட்டு

திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பவை பத்துப்பாட்டில் அடங்கும். ஆற்றுப்படை என்பது ஒருவகையான பாடல் மரபுடையது. புரவலன் ஒருவனிடம் பரிசுபெற்றுத் திரும்பும் கலைஞன், வறுமையுற்ற வேறொரு கலைஞனுக்குப் புரவலனிடம் செல்லும் வழியினைக் காட்டுவதே ஆற்றுப்படையாகும். நாடு, மக்கள், அரசியல், தெய்வம் முதலிய பொருள்களை விரிவாகப் பாடுவதற்கு வாய்ப்பு அளிக்கும் கவியுத்தி இது. நக்கீரர் இயற்றிய திருமுருகாற்றுப்படையில் முருகனைப் பற்றிய புராண சரித்திரங்களும் சமயக் கருத்துக்களின் வளர்ச்சியும் புலப்படுவதால் இது சங்க காலத்தைத் தொடர்ந்த காலத்துக்கு உரியது என்று கொள்ளல் வேண்டும். மற்றவை சங்ககால நூல்களே. போர்க்களம் பாடும் பொருநன் ஒருவன் கரிகாலனிடம் பரிசு பெற்று வந்து, மற்றொரு பொருநன் சோழனது வள்ளன்மையால் வாழ்வதற்கு வழிகாட்டுவதாக உள்ளது பொருநராற்றுப்படை. இதுவும் பட்டினப்பாலையும் கரிகாலனது பெருமையையும் சோழநாட்டின் சிறப்பையும் பூம்புகாரின் உயர்வையும் விதந்தோதுகின்றன. நெடுநல்வாடையும் மதுரைக்காஞ்சியும் பாண்டியன் நெடுஞ்செழியனது மேன்மையை எடுத்துரைப்பன. மதுரைக்காஞ்சி அந்நகரின் மாண்பை நன்கு சித்தரிக்கிறது. படையெடுப்பைத் தடுத்துப் போராடல் என்ற ஒழுக்கத்தைக் குறித்த காஞ்சித்திணை, சங்ககாலத்திலேயே, நாளாவட்டத்தில்

ஏற்பட்ட நாகரிக வளர்ச்சியால், நிலையாமை என்ற பொருளுக்குரியதானது. எனவே நிலையாத உலகில் நிலைத்த புகழினை நாட்டவேண்டுமென்று நெடுஞ்செழிய னுக்கு அறிவுறுத்தும் மாங்குடி மருதனாரின் நூல், மது ரைக்காஞ்சி என்ற பெயர் பூண்டது. (தொல்காப்பிய மும் காஞ்சிக்கு நிலையாமை என்றே பொருள் கொண் டது.)

முல்லைப் பாட்டும் குறிஞ்சிப் பாட்டும் அகத்திணை நூல்களாம்.

## சங்க இலக்கியத்தின் சிறப்பு

சங்க நூல்களிலிருந்து 473 கவிஞர்களை இனம் கண்டுகொள்கிறோம். அவர்கள் சமகாலத்தாரல்லர் ; ஓரிடத்தாருமல்லர். அவர்களில் சமணர், பௌத்தர், வைதிகர் என்ற வெவ்வேறு சமயத்தினரைக் காண்கி றோம். அவருள் அரசர், அந்தணர், வணிகர், உழவர் முதலிய பலநிலை மாந்தர் உண்டு. ஆடவரும் உளர்; பெண்டிரும் உளர். ஔவையார், காக்கைபாடினியார், பூதப்பாண்டியன் தேவியார் முதலியோர் குறிப்பிடத் தக்க பெண்பாற் புலவர்களாவார்கள். கபிலரும் பரண ரும் சங்ககாலப் புலவர்களில் சிறந்தவர்கள்.

சங்கப் புலவர்கள் இயற்கை அழகில் ஈடுபட்டனர். இயற்கையைக் கூர்ந்து நோக்கி நுட்பமாக ஆராயும் அவர்தம் திறத்துக்குச் சங்கப் பாடல்கள் சான்று பகர் கின்றன. அவர்களைப் பெரிதும் கவர்ந்த சுவைகள் காதலும் வீரமும் ஆம்.

உண்மை, நேர்மை, எளிமை, பெருமிதம் ஆகியவை சங்க இலக்கியத்தின் சிறப்பியல்புகளாகும். சொற் களைச் சுவைத்துத் தேர்ந்தெடுத்துப் பொருள் ததும்பும் தொடர்களில் அமைத்து, இயல்பான பேச்சின் ஓசை

யுடன் கூடிய உணர்ச்சிமிக்க கவிதைகளைப் பாடினார்கள். பெரும்பாலும் அகவற்பாவில் கவிதை இயற்றினர்.

கவிதா வெறியோடு விண்ணிலிருந்து மண்ணுக்கும் மண்ணிலிருந்து விண்ணுக்கும் பார்வையைச் சுழற்றுவோனென்றும், புத்தம் புதிய கற்பனைக்கு உருவும் ஊரும் பேரும் தருவோனென்றும் கவிஞனுக்கு ஷேக்ஸ்பியர் இலக்கணம் கூறுவார். அவ்வாறு வெண்சுடர் நிலை எய்திய மனோபாவனையினைப் பெற்றவர்களென்று சங்கக் கவிஞர்களைக் கணிக்க முடியாது. பொருத்தமில்லாத உயர்வுநவிற்சியான வர்ணனைகளையும் அவர்களிடம் காணமுடியாது. கவர்ச்சியான இயற்கை வர்ணனையும் நுட்பமான உணர்ச்சி விளக்கமும் தமிழின் இயற்கையான நேரிய பெருமித நடையும் இசைந்தமைந்து, இளமைத் திறத்தால் என்றும் புதுமையாகக் காட்சிதருவதே சங்க இலக்கியம் என்போம்.

## சமுதாய நிலை

சங்ககாலத் தமிழகம் பாரதத்தின் பிறபகுதிகளோடு நெருங்கிய வணிகத் தொடர்பு கொண்டிருந்தது. ஆரியரும் ஆரியருடன் கலந்த வடவரும் தமிழகத்தில் குடியேறி நாளாவட்டத்தில் தமிழரானார்கள். பல துறைகளில் அனைத்திந்திய ஒருமைப்பாடு உருவாகியிருந்தது. அரசு, அமைச்சு, அவையம், படை முதலானவற்றைப் பற்றிய கருத்தோட்டத்தில் இந்திய ஒற்றுமை ஏற்பட்டிருந்தது. அரசியல் யாகம் செய்த தமிழ் மன்னர்களைக் காண்கிறோம். சிறப்பாகப் பொலிவு பெற்றது வேத வேள்வி. அறுதொழில் அந்தணர் அறம் புரிந்தெடுத்த தீயொடு விளங்கும் நாடன் (புறம் 397) என்று சோழன் கிள்ளிவளவன் சிறப்பிக்கப்படுகிறான். பாண்டியன் முதுகுடுமிப் பெருவழுதிக்குப் 'பல்யாகசாலை' என்ற அடைமொழி கூறப்படுகிறது. கரிகாலனும் பெருநற்

2800

கிள்ளியும் யாகம் செய்த செய்திகளும் உண்டு. சூரன், இராவணன், திரிபுரத்து அரக்கர் முதலானோர் கடிந் துரைக்கப்படுகின்றனர்.

வேடன், பாணன், துடியன் முதலிய குடிவகை களுடன் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நான்கு வகுப்புகளையும் குறிப்பிடுகின்றன சங்க நூல் கள். பரமசிவன், திருமால், முருகன், இந்திரன், பலரா மன் முதலிய தெய்வங்களைத் தமிழர் வழிபட்டனர். சமண பௌத்தங்களைத் தழுவிய தமிழரும் இருந்தனர்.

சங்ககாலத் தமிழர்கள், போர்களால் நேர்ந்த அழிவு களுக்குமிடையே, வாழ்வின் இன்பங்களைத் துய்ப்பதில் பெருவிருப்புக் கொண்டிருந்தனர் என்பது மெய்யே. ஆனால் அதேபோதில், அவர்கள் வாழ்வை உயர்த்தும் பண்புகளிலும் அறநெறிகளிலும் உண்மையான ஆர்வம் காட்டினர். சமயங்களின் செல்வாக்கே அதற்கு ஓர் அளவுகோல் எனலாம். இந்தியப் பண்பாட்டின் சிறப் பான வெளியீடாகச் சங்ககாலத் தமிழகத்தில் அமைந்த தையே சான்றோர் நெறி என்போம். தமக்கென வாழாப் பிறர்க்குரியாளரே சான்றோர் ஆயினர். அவர்கள் அன் பையும் ஒற்றுமையையும் உபதேசித்தனர். பொருளா தார இன்னல்களுக்குத் தீர்வு காணும்பொருட்டுக் கைம் மாறு கருதா ஈதல் அறத்தை மேற்கொள்ளும்படி அறி வுறுத்தினர். அரசர்கள் அன்பும் அருளும் கொண்டு கோலோச்ச வேண்டுமென்று எடுத்துரைத்தனர். அற வழியிலிருந்து பிறழ்ந்த அரசரை இடித்துக்கூறி நல்வழிப் படுத்துவதற்கு அயராது முயன்றனர். இல்வாழ்வைத் தூயவழியில் நடத்துமாறு போதித்தனர். எடுத்துக் காட்டுகள் :

- புகழெனின் உயிரும் கொடுக்குவர் ; பழியெனின்
  உலகுடன் பெறினும் கொள்ளலர் ; அயர்விலர்.

(புறம் 182)

- எவ்வழி நல்லவர் ஆடவர்
  அவ்வழி நல்லை வாழியநிலனே (புறம் 187)
- வாழச் செய்த நல்வினை யல்லது
  ஆழுங் காலைத் துணைபிறி தில்லை (புறம் 367)
- இவண் இசை உடையோர்க் கல்லது அவணது
  உயர்நிலை உலகத்து உறையுள் இன்மை
  (புறம் 50)
- சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
  அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல
  (புறம் 31)
- யாதும் ஊரே, யாவரும் கேளிர் (புறம் 192)
- செல்வத்துப் பயனே ஈதல்
  துய்ப்பேம் எனினே தப்புந பலவே (புறம் 189)
- இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
  அறவிலை வணிகன் ஆய் அலன் (புறம் 134)
- அருளும் அன்பும் நீக்கி நீங்கா
  நிரயங் கொள்பவரோடு ஒன்றுது காவல்
  குழவி கொள்பவரின் ஓம்புமதி (புறம் 5)
- நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
  அல்லது செய்தல் ஓம்புமின் (புறம் 195)
- வடமீன் புரையும் கற்பின் மடமொழி
  அரிவைதோள் அளவு அல்லதை
  நினைதென இலைநீ (புறம் 122)

# 3. சங்கம் மருவிய காலம்
## (கி.பி. 300-600)

சங்ககாலத்தைத் தொடர்ந்து நான்காம் நூற்றாண்டு முதல் ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகளில் தமிழ்நாட்டில் நிகழ்ந்தவற்றைக் குறித்துத் திட்டமாக ஏதும் அறிய முடியவில்லை. இந்த உண்மையைக் கருதி, அக்காலத்தை இருண்ட காலம் என்பது ஏற்புடைத்தே. ஆனால் அந்த ஆண்டுகளில் தமிழகம் தாழ்வுற்று இழிநிலை எய்தியது என்பதற்குச் சான்று இல்லை. மாறாக, அக்கூற்றை மறுப்பதாகவே அக்கால இலக்கிய வரலாறு உள்ளது.

அந்த நாட்களில் பாண்டிய நாட்டிலும் சோழ நாட்டிலும் களப்பிரர் என்பவர் அரசாண்டனரென்று வேள்விகுடிச் செப்பேடுகள் கூறுகின்றன. ஆனால் அந்தக் களப்பிரர் யார் என்பதைப் பற்றி உறுதியாக ஒன்றும் தெரியவில்லை. அவர்கள் பௌத்த மதத்தினர் என்றும் அச்சுதவிக்கந்தன் என்ற களப்பிர வேந்தனாட்சியில், சோழநாட்டில், பௌத்த மடங்களும் புலவர்களும் சீரும் சிறப்புமாக விளங்கினரென்றும் பௌத்த நூல்களிலிருந்து அறிகிறோம். அவர்கள் பௌத்தராயிருந்ததாலேயே, கலி அரசர்கள் என்றும் பண்பாட்டின் பகைவர்கள் என்றும், பின்னாளில் தூற்றப்பட்டனரென்று,ஊகிக்கலாம். அச்சுதவிக்கந்தன், சேர சோழ பாண்டியர்களை

கிய முடியுடைவேந்தர் மூவரையும் தளையிட்டிருந்த தாகப் பிற்காலச் செய்தி ஒன்று கூறுகிறது. அது உண் மையாக விருக்கலாம். ஆறும் நூற்றாண்டின் இறுதி யில் பல்லவரும் பாண்டியரும் களப்பிரர் ஆட்சியை ஒழித்த பின்னர், வைதிகச் சமயங்கள் மறுமலர்ச்சியுற்ற சூழலில், களப்பிரரைக் கயவராகக் கருதும் போக்கு நிலை கொண்டது இயல்பே.

## சமண பௌத்தங்களின் வெற்றி

சங்ககாலத் தமிழகத்தில் காதலும் வீரமும் சிறப்புக் குரியனவாய் விளங்கின. ஆனால் காதல் ஈடுபாடு சிற் றின்ப வழிபாடாகச் சிறுமையுற்றது; பரத்தையரைப் பற் றிய பல செய்யுட்கள் இதனைப் புலப்படுத்துகின்றன. வீர வணக்கமும், விவேகத்தைத் துறந்து முரட்டு வீரத்தைப் பரவும் தன்மையதாகி, வீண் சண்டைக்கு அடிகோலியது. பெருநிலங்களைக் கட்டி ஆண்ட மூவேந்தர் ஏற்பாட்டில் ஓங்கி வளர்ந்த வாணிபம் பல்கிப் பெருகுவதற்கே அது தடையானது. எனவே, சங்ககால நாகரிகத்தில் படிந்த இக்கேடுகளை நீக்கும் பணி முன்னேற்றத்துக்கு முன் தேவையானது. அந்நிலையில், அன்பு நெறியைப் போதித்த புத்த பகவானும் அகிம்சை வழியினைக் கற் பித்த மகாவீரனும், நல்லொழுக்கத்தின் விழுப்பத்தை நவின்ற அவர்களது சமயங்களும், சான்றோரையும் வணிக ரையும் ஈர்த்ததில் வியப்பில்லை. ஆக, களப்பிரர் ஆட்சி யில் சமணமும் பௌத்தமும் ஏற்றம்கொண்டன. பண் டைய ரோமானியர் பேரரசில் நேர்ந்ததுபோல் ஒழுக்க இழிவால் குடும்பம் குலைந்தும் ஆண்மை அழிந்தும் சமு தாயம் சிதையுமென்ற அச்சம் நீங்கியது; அறநெறிப் பிழையா மாந்தர் செயலாண்மைத் திறனுக்குரிய தலை முறைகளைத் தோற்றுவித்தனர். இந்நாளில் பொருளா தாரம் அடைந்த பொலிவும் வலிவும் சிலப்பதிகாரத்தால் துலாம்பரமாகும். பூம்புகாரைப் பற்றிப் பட்டினப்பாலை,

பேசுவதையும் சிலப்பதிகாரம் செப்புவதையும் ஒப்பிட்டால், வேந்தரையும் விஞ்சிய செல்வமும் செல்வாக்கும் படைத்தவராகப் பெருங்குடி வணிகரைச் சிலப்பதிகாரம் சித்திரிப்பதை ஆராய்ந்தால், சங்கம் சார்ந்த (களப்பிரர்) காலத்தில், வணிகம் அடைந்த வளர்ச்சி தெற்றென விளங்கும்.

## தொல்காப்பியம்

இவ்வாறு உயர்வுற்ற காலத்தின் தலையாய நூல் தொல்காப்பியமாகும். அந்த இலக்கண நூலே தமிழில் தொன்மையான நூலென்று வாதிப்பார் உளர். ஆயினும் சமுதாய வளர்ச்சியினைப் பற்றி அதிலுள்ள குறிப்புக் களும் பரதமுனிவர் முதலியோரது கருத்துக்கள் அதில் இடம் பெற்றிருப்பதும், சங்க நூல்களது இலக்கணம் பெரும்பாலும் தொல்காப்பியத்திலிருந்து வேறுபட்டிருப் பதும், தொல்காப்பியம் சங்க நூல்கட்குப் பிற்பட்ட தென்ற கருத்தை வலிபெறச் செய்கின்றன. சங்ககால இறுதியிலோ சங்கம் மருவிய காலத் தொடக்கத்திலோ தொல்காப்பியம் தோன்றியிருக்கவேண்டும்.

அந்நூலுக்குப் பாயிரம் பாடிய பனம்பாரனுர், "பல்புகழ் நிறுத்த படிமையோன்" என்று தொல்காப் பியரைப் போற்றுகிருர். படிமா என்ற பிராகிருதச் சொல்லின் தமிழ் வடிவே படிமை என்றும். இல்லற நெறிநின்ற சமணர் தழுவிய தவ ஒழுக்கங்களையே அது குறிக்குமென்றும், அதனுல் தொல்காப்பியர் சமண சமயச் சீலரே என்றும் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அனுமா னித்துக் கூறுவார். ஓர் அறிவு உயிர் முதல் ஆறு அறிவு உயிர் ஈருக உயிரினங்களை வகைப்படுத்தும் வழக்கு பூர்வத்தில் சமணருக்கே உரியது என்றும், அதனைத் தொல்காப்பியர் வகைந்துரைப்பதாலும் அவர் சமண ரென்பது உறுதிப்படுமென்றும் வையாபுரிப் பிள்ளை விளக்குவார்.

எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று அதிகாரங்களை உடையது தொல்காப்பியம். ஒவ்வோர் அதிகாரத்திலும் ஒன்பது இயல்கள் உண்டு. தமிழ் மக்களது பேச்சு வழக்கங்களை நுட்பமாய் ஆராய்ந்து, சொற்களின் தொடக்கத்திலும் இறுதியிலும் வரத்தக்க ஒலிகளையும், எந்த ஒலிக்குப்பின் எந்த ஒலி வருமென்பதையும் வகைப்படுத்திய பெருமை தொல்காப்பியருக்கே உரியது. சொல்லதிகாரம் வேற்றுமை விதிகளை எடுத்துரைக்கிறது; பெயர், வினை, இடை, உரி என்ற சொல்வகைகளைப் பற்றியும் பேசுகிறது. இவ்வாறு சொற்றொடர் இலக்கணத்தை ஆராயும் ஆசிரியப் பெருந்தகை, பிறமொழிச் சொற்கள் தக்க மாற்றங்களுடன் தமிழில் கலப்பதைப் பரந்த மனப்பான்மையுடன் போற்றுகிறார்.

''இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே''

என்ற சூத்திரம் இதற்குச் சான்று. மேலும், ''கடிசொல் இல்லை காலத்துப் படினே'' என்று கூறி நாளாவட்டத்தில் நின்று நிலைத்த புதுச்சொற்களை ஏற்கவேண்டுமென்று வழிகாட்டுகிறார். ஒவ்வொரு மொழியிலும் பிறமொழிச் சொற்கள் கலப்பது இயல்பே என்பதையும், அக்கலப்பினுக்குத் தடைவிதிப்பது அறிவு வளர்ச்சிக்கே ஆபத்து என்பதையும் அவர் தேர்ந்து தெளிந்திருந்தார் என்பது இச்சூத்திரங்களிலிருந்து நன்கு விளங்கும். மேலும், படலம், பிண்டம், சூத்திரம் முதலான வடசொற்களுக்கு அவர் வரைவிலக்கணம் தருவதும் உன்னி ஓர்வதற்குரிய விவரமாகும்.

பொருளதிகாரம் அகத்திணைகளையும் புறத்திணைகளையும் பற்றி விவரிக்கிறது. சங்ககால வாழ்வின் வளர்ச்சிப் போக்கில் பயிலப்பெற்ற ஒழுக்கங்களைப் போற்றியும் திருத்தியும் செயற்கையாக ஒன்று சேர்த்தும் முழுமையான மரபு ஒன்றைப் படைக்கவே பொருளதிகாரம்

முயல்கிறது. அவர்தம் அகப்பொருள் இலக்கணத்தில் சமண சமயத்துக்குரிய உட்பொருள் காண்பாரும் உண்டு. அது எவ்வாருயினும், அகம், புறம் பற்றித் தொல்காப்பியர் வகுத்த விதிகள் பின்னுளைய இலக்கிய வளர்ச்சியை உருவாக்குவதில் குறிப்பிடத்தக்க பாத்திரம் வகிக்கவில்லை என்பது உண்மையே.

பொருளதிகாரத்தின் இறுதியில் அமைந்த நான்கு இயல்களும் ஆசிரியரது புலமைக்கும் கூர்த்த அறிவுக்கும் சான்று பகர்வன. அவற்றில் ஒன்று மெய்ப்பாடுகளைப் பற்றியது. அது உள்ளத்து உணர்ச்சிகளையும் அவற்ருல் மெய்யில் தோன்றும் வேறுபாடுகளையும் நுட்பமாக ஆய்ந்து தெளிவாக எடுத்துரைக்கிறது. மற்ற மூன்ருன உவம இயலும் செய்யுளியலும் மரபு இயலும் அவர்தம் இலக்கண இலக்கியப் புலமையினையும் சொல்லாட்சி ஞானத்தையும் புலப்படுத்துவதோடு தெளிந்த நடைக்கும் எடுத்துக்காட்டாக உள்ளன. இந்த நான்கு இயல்களிலும் இவர் ஒப்புவமை இல்லாத இலக்கண கர்த்தாவாகக் காட்சி தருகிருர்.

## கீழ்க்கணக்கு நூல்கள்

எட்டுத்தொகையினைச் சேர்ந்த கலித்தொகையும் பரிபாடலும், பத்துப்பாட்டிலுள்ள திருமுருகாற்றுப் படையும் சங்கம் மருவிய காலத்து நூல்களென்ருேம். கீழ்க்கணக்கினைச் சேர்ந்த பதினெட்டு நூல்களில் திருக்குறள், நாலடி, பழமொழி, நான்மணிக்கடிகை, முதுமொழிக்காஞ்சி, இன்னுநாற்பது ஆகிய அறநெறி நூல்களும், ஐந்திணை ஐம்பது, கார்நாற்பது என்ற அகப்பொருள் நூல்களும், களவழி நாற்பதும் இக்காலத்துக் குரியனவே. இவை தவிர, கீழ்க்கணக்கைச் சேர்ந்த திரிகடுகம், ஏலாதி, சிறுபஞ்சமூலம், இனியவை நாற்பது, ஆசாரக்கோவை என்ற அறநெறி நூல்களும் ஐந்திணை எழுபது, திணைமாலை ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது

கைந்நிலை ஆகிய அகத்திணை நூல்களும் அடுத்த கால கட்டத்துக்கு உரியன. கீழ்க்கணக்கைச் சேர்ந்த அகத் திணை நூல்கள் கற்பனைச் சூழலையும், அறநெறி நூல்கள் லட்சியச் சூழலையும் படைத்துக்கொள்கின்றன. அனைத் துமே கற்றறிந்தோர் ஆள்வதான திருத்தமானதும் நய மானதுமான இலக்கிய நடையைப் பயில்கின்றன. குறள், நாலடி, பழமொழி முதலான நீதி நூல்கள் சமணர் இயற் றியவை. சமணர் சென்ற வழியினைத் தழுவி இந்துக்கள் இயற்றிய நீதி நூல்களுக்குச்சான்றுகளாகத் திரிகடுகத்தை யும் ஆசாரக்கோவையினையும் குறிப்பிடவேண்டும்.

## திருக்குறள்

இந்த நூல்களில் தலையாயது திருக்குறளே. அதனை இயற்றிய பெருமகனாரின் இயற்பெயரையும் நாம் அறி யோம். அரசர்தம் ஆணையை யானைமேல் பறைசாற்றி நாட்டினருக்கு அறிவித்த வள்ளுவர் குலத்தில் தோன்றிய தாலேயே அவர் திருவள்ளுவர் எனப்படுகிறார். ஆகவே, பாடுபடும் மக்களது படைப்பாற்றலுக்கும் பண்பாட்டுக் கும் மனோபாவனைச் சிறப்புக்கும் திருக்குறள் சான்றாக விளங்குகிறதென்றால், அது மிகையான கணிப்பு ஆகாது.

வள்ளுவர் சமண சமய மையமாக விளங்கிய மைலாப்பூரில் பிறந்தாரென்பது செவிவழிச்செய்தி. அவர் மதுரையில் அவதரித்தார் என்பது சிலஅறிஞர் கொள்கை; ஞானசம்பந்தர் வருகை தந்து சமணத்துக்கு முடிவுகட் டியதற்கு முன்னால் மதுரையும் சமணர் அரணாகவே விளங்கியது. "மலர்மிசை ஏகினான்," "அறவாழி அந்த ணன்," "எண்குணத்தான்" என்ற அருகதேவனுக்கே உரிய அடைமொழிகளால் வள்ளுவர் கடவுளைக் குறிப் பிடுவதால் அவர் சமணர் என்று நிறுவலாம். தேவர் என்று இவருக்கு வழங்கும் பெயர் சமணப் பெயரே என்பர். சமண முனிவரான திவாகரர் திருக்குறளை "எமது ஓத்து" (ஓத்து—மறை) என்று கூறுவதும் இங்குக்

கருதத்தக்கது. ஆனால் பிறரிடமிருந்து தம்மை வேறு படுத்திக்கொண்டு வாழ முனைந்த சமணரல்லர் வள்ளுவர். பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் மொழிவதைப் போல், "அவர் கூறியன எல்லாம் சமணக் கொள்கை என்று வாதாடுவதைவிட, எல்லோரும் ஒப்பும் வகையில் அச்சமணக் கொள்கையின் அடிப்படையை எடுத்து விளக்கிய பெரியவர் என வரவேற்பதே தக்கதாம்."

அவனியில் வாழ்வோர் அனைவரையும் அன்பு நெறியில் அணைத்துக்கொண்டு, வையத்தில் வாழ்வாங்கு வாழ்வதற்கு வழிகாட்டும் பொதுநோக்கில் வடிவெடுத்த புனித நூலாகத் திருக்குறள் திகழ்கிறது. எனவேதான் அதனை வான்மறை என்று போற்றுவான் பாரதி. "வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு" என்றும் நவில்வான். குறளின் உலகப் பொதுமையை வற்புறுத்துவதோடு, அத்தகைய பொதுமறையைப் புவனத்துக்கு அளித்தவரால் தமிழ்நாடு "வான்புகழ்" மேவியது என்றும் கணிக்கிறான் பாரதி.

அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினையும் மாந்தர்க்கு அமைந்த உறுதிப் பொருள்கள் என்று பண்டைய பாரதம் கருதியது. பரிமேலழகர் புகன்றது போல், வீடு அல்லது விமோசனம் என்பது சிந்தைக்கும் மொழிக்கும் அப்பாற்பட்டதாகும். எனவே அறம், பொருள், இன்பம் என்ற மூன்றையும் திருக்குறள் எடுத்துரைக்கிறது. முப்பால் என்பதே அதற்கு அமைந்த பெயர்களில் ஒன்று.

சமுதாயத்தின் பல்வேறு பகுதியினரது வாழ்வினைப் பரிவுடன் ஆராய்ந்து, அது விழுப்பம் பெறுவதற்கு வழிகாட்டிய முதற்பெரும் தமிழ்ப் புலவர் வள்ளுவரே ஆவார். "யான், எனது" என்னும் செருக்கை நீக்கி உலகம் முழுவதையும் உறவாகக்கொண்டு வாழும் துறவறத்தில் மெய்ப்பொருள் அறிவு தோன்றி விருப்பு வெறுப்பற்ற முழுநிலை கனியுமென்பதே வள்ளுவர் விளக்

கும் துறவறமாம். அந்த நிலையே பிறவாமைப் பேற்றினை உறுதி செய்யுமென்பார். துறவறத்தினைப் போலவே இல்லறத்துக்கும் ஏற்றம் தருகிறார் வள்ளுவர். வைகுந்த லோக இன்பத்தையும் விஞ்சியதாகக் காதலர் இன்பத்தைச் சித்திரிப்பது காமத்துப்பால். கருத்தொருமித்த காதலர், கணவன் மனைவியராக இல்வாழ்க்கை நடத்தும் போது, அன்பென்ற பண்பு அறம் என்ற பயனாக மலர்தல் வேண்டுமென்பது அறத்துப்பால் வகுக்கும்வழி. பேறுகளிலே சிறந்தது அறிவுக்குரிய மக்கட்பேறு என்று தற்சான்று நடையில் மொழிவார் வள்ளுவர். மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் நலமே புரியும் தன்மையராக மக்களை வளர்க்க வேண்டுமென்பார். குடும்பத்தைக் கட்டிக் காக்கும் அன்பு, உற்றார் உறவினரைத் தழுவலோடு அமையாது, ஊராரையும் உலகத்தாரையும் அணைத்துக்கொள்வதாக விரியவேண்டும். கைம்மாறு கருதாது பொழியும் மழையேபோல், உலகத்துக்குப் பயன்கருதாப் பணி புரிவதையே ஒப்புரவு என்பார். பகுத்துண்டு பல்லுயிரோம்பும் செயலால் புகழ் பெறுவாரே வாழ்வார் என்றும், அவ்வாறு இசைபெறாதவர் வசைக்கு உரியர் என்றும் கூறி, தமர் என்றும் பிறர் என்றும் வேறுபாடு காட்டாத உறவு நிலையினையே இல்லறத்தின் முடிவாகக் காட்டுகிறார்.

அரசியலையும் சமுதாய வாழ்வினையும் பேசும் பொருட்பால் முடியரசுக் காலத்துக்குரியது. என்றாலும் அடிப்படையான உண்மைகளையே எடுத்துரைப்பதால், பெரும்பாலும் குடியரசுக் காலத்துக்கும் ஏற்புடைத்தாக அமைந்திருக்கிறது. இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யவேண்டுமென்று தனிவாழ்வுக்கு அறம் வகுத்த ஆசிரியர், பொதுவாழ்வில் குறிக்கோளின் நன்மை கருதிக் குறுநெறியினையும் தழுவுவதற்கு இடம் தருகிறாரென்பது உண்மையே. மாற்றான் முதல் மைந்தன் வரை எவரையும் நம்பாது அனைவரையும் ஒற்றாடவேண்டுமென்ப

தும். பொருத்தலாகிய சந்தியிலும் பிரித்தலாகிய விக்கிரகத்திலும் வல்லவனே அமைச்சன் என்பதும், முன்னேரைத் தழுவிய அவரது ஆட்சிக் கலையில் இடம் பெறுகின்றன. ஆயினும், இயன்ற அளவுக்கு வினையிலும் தூய்மை வேண்டுமென்று மொழியத் தவறவில்லை அவர். தவிர, அறங்காத்தலே அரசின் பணியென்றும், சுடுசொல் பொறுத்தும், கடுஞ்சொல் தவிர்த்தும், காட்சிக்கு எளியனுயும், பெரியாரைத் துணைகொண்டும், குடிகளைத் தழுவியும் கோலோச்சுவோனே அறவேந்தன் என்றும் அவர் இந்திய லட்சிய அரசின் இலக்கணத்தை எடுத்துக் கூறுவார். குலத்தால் உயர்வும் தாழ்வும் அமையும் என்று குடிமை அதிகாரம் பேசுவது உண்மையே.

அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர்.

என்று உயர்குடிப் பிறந்தாருக்கு மேன்மைக் கூறுவதைச் சான்ருகக் காட்டலாம். எனினும், உயர்குடி மகன் ஒழுக்கம் தவறினுல் இழித்தவனுகிவிடுவானென்றும் தாழ்ந்த குடியில் தோன்றியவன் ஒழுக்கச் செம்மையால் உயர்குடியினனுவானென்றும் அவர் கருதினுர். அதனுல்,

ஒழுக்கம் உடைமை குடிமை; இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்

என்றும்,

மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்

(ஓத்துக்கொளல்–(வேதம்) ஓதிக்கொள்ளல்)

என்றும் அவர் கூறினுர்.

பொதுவாழ்வில் பெண்சொல் கேட்டல் தீது என்று (பெண்வழிச் சேறல் அதிகாரம்) வள்ளுவர் கூறுவார். ஆயினும், இல்வாழ்வில் பெண்ணைக் கண்

ணைப் போற்றும் பாரதப் பண்பாட்டின் விளக்கமாக வள்ளுவரது வாழ்க்கைத்துணை அதிகாரம் அமைந்திருக்கிறது. தன்னைக் கற்புநெறியில் காத்தலோடு, கணவனையும் அறவழியில் காத்துக் குடும்பத்தின் புகழைப் பேணும் பொறுப்பையும் பெண்ணே சுமக்கவேண்டுமென்பார் வள்ளுவர்.

சங்ககாலத் தமிழர்கள் களவும் கொலையும் போலவே கள்ளும் சூதும் பரத்தையர் இன்பமும் தீவினைகளென்பதை உணரவில்லை. அவர்கட்குக் கள்ளின் மீதிருந்த காதலைச் சங்க நூல்கள் புலப்படுத்துகின்றன. விலைமகளிரை நாடிச் சென்ற கணவனுக்கும் பிரிவில் வருந்திய மனைவிக்கும் ஏற்பட்ட பிணக்கைப் பல அகப்பாடல்கள் பேசுகின்றன. இந்தக் கேடுகளை நீக்கவே வள்ளுவர் வரையின் மகளிர், கள்ளுண்ணுமை, சூது என்ற அதிகாரங்களைப் பாடினர். சிற்றின்ப வழிபாடே சங்ககால நாகரிகத்துக்கு இறுதி சூழ்ந்து சமண பௌத்த தர்மங்கள் மேலோங்கிய புதிய சகாப்தத்துக்கு வழி செய்தது என்றேம். சிற்றின்ப வேட்கை என்பது அயலான் மனைவியை விரும்பும் அளவுக்குச் சிறுமை தேடித்தந்தது எனலாம். எனவேதான்,

> அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
> பெண்மை நயவாமை இனிது

என்பார் வள்ளுவர். "அறம் அல்லாத புறவழியில் சென்று என்ன பாவம் செய்தாலும், அன்னியன் மனைவியின் பெண்மையை விரும்பும் பாவத்தைப் புரியாதே" என்பது இதன் பொருள். பிறன் மனைவியை விரும்பாத தன்மையைச் சர்வசாமான்யப் பண்பு என்று நாம் கருதுவோம். ஆனல் அதனையே "பிறன்மனை நோக்காப் பேராண்மை" என்று கணித்தும் குறள். மற்றவன் மனைவியிடம் காமம் கொள்ளாமையை அரிய பெரிய செயலாகக் கருதுவதையே பேராண்மை என்ற சொல்

உணர்த்துகிறது. இதிலிருந்து காமத்தால் சமுதாயத் துக்கு நேர்ந்த கேட்டினை உய்த்துணரலாம். இவ்வாறு சங்ககாலச் சமுதாயத்துக்கு இழிவு தேடிய சிற்றின்ப வேட்கையைச் சாடி, லட்சியக் காதல் வழியில் ஆடவ ரும் மகளிரும் இணைந்து இல்லறம் அமைத்து தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராக வாழ்வதற்கு வழிகாட்டியது குறள்.

வள்ளுவர் பொதுவுடைமை ஓதுவதாக உரைப்ப தெல்லாம் வீணே. சான்றோர் பழிக்கும் வினையினைப் புரியாது, அன்பும் அறமும் தழுவிய வழியில் பொருள் திரட்டவேண்டுமென்றே கூறுவார் அவர். உழைப்பை உயர்த்திப் பேசுகிறாரென்பதும் உண்மையே. உழைப்பால் ஊழையும் உப்பக்கம் காணலாமென்றும் உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் என்றும் அவர் கூறுவார். உழைத் துப் பிழைப்பதே உயர்வு என்று அவர் கருதியதாலேயே, இரந்து வாழும் அவலத்தை வெறுத்தார். ஆயினும் இன்மையின் துன்பத்தை நன்குணர்ந்த வள்ளுவ நெஞ் சம், இல்லாதவர் இரப்பதும் குற்றமில்லை என்று கூற வேண்டியதாயிற்று. வறியார்க்கொன்று ஈவதே செல் வந்தர் பணியென்று பன்னிப்பன்னிப் பேசுவார் வள்ளுவர். ஈட்டம் விரும்பிப் பொருளை வழங்காத லோபியை நடு வூரில் வளர்ந்த நச்சு மரமென்றே சபிப்பார். அந்தக் கயவர்களிடம் கருணை காட்டக்கூடாதென்றும், அவர்க ளிடம் வன்முறை ஆள்வதே தகுதியான செயலென்றும் கயமை அதிகாரத்தில் கூறுவார்.

ஆக அன்பும், பண்பும், நாணமும், ஒப்புரவும், வாய்மையும், மானமும் உயிராகக் கொண்ட குடிமக்கள் கூடிவாழும் லட்சியச் சமுதாயத்தை அமைக்கும் நோக் கில் திருக்குறள் அமைந்திருக்கிறது என்போம்.

## சிலப்பதிகாரம்

தமிழை வாழ்வித்த மூவரில் ஒருவரான இளங்கோ வடிகள் இயற்றிய இக்காப்பியத்தை,

நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்
என்றோர் மணியாரம் படைத்த தமிழ்நாடு

என்று பாரதி புகழ்ந்திருப்பதை நாம் அறிவோம்.

இளங்கோ வடிகள் சேரன் செங்குட்டுவனது தம்பி என்று செப்பப்பெறும்; ஆனால் சங்க நூல்களில் இதற்குச் சான்று இல்லை. மணிமேகலையின் ஆசிரியரான கூலவாணிகன் சாத்தனாரும் இளங்கோ வடிகளும் சம காலத்தவர் என்பர். மணிமேகலையோ பௌத்தமத காவியம். சங்கப் புலவர்களில் ஒருவரான சீத்தலைச் சாத்தனார் தமது கவிதைகளில் பௌத்த மதச் சார்பினைப் புலப்படுத்தவேயில்லை. எனவே மணிமேகலை இயற்றிய சாத்தனார் வேறு, சங்ககாலச் சாத்தனார் வேறு என்பது புலனாகும். மேலும் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த திங்நாகரது தர்க்க நூலான நியாயப் பிரவேசம் என்பதற்கு மணிமேகலை கடன்பட்டிருப்பதை அறிஞர்கள் தெளிவாக நிறுவியுள்ளனர். தவிர, சிலப்பதிகாரமும் மணிமேகலையும் தம் இலக்கியப் பண்புகளில் சங்கச் செய்யுட்களிலிருந்து பெரிதும் வேறுபட்டுள்ளன. எனவே, இந்த இரு காப்பியங்களும் சங்கம் சார்ந்த காலத்தில் திருக்குறளுக்குப் பின்தோன்றியவையென்றே க்ருதல்வேண்டும். இவற்றில் சிலப்பதிகாரத்துக்குப் பின்னர் மணிமேகலை தோன்றியது என்றே கொள்ள வேண்டும்.

சிலப்பதிகாரத்தை வரலாற்று வைப்புநிதியாகக் கொள்வது பிழையேயாகும். இக்காப்பியத்துக்கு உரை எழுதிய அரும்பத உரைக்காரர், ‘‘சிலப்பதிகாரக் கதையைச் சாரமாய் நாவேதரி’’ என்று தம் காப்புச் செய்யுளில் கூறுவதால் சிலப்பதிகாரம் ஒரு கதையே என்பது புலனாகும். சங்க காலத்துக்கும் முன்பே மெய்யாக நிகழ்ந்த நிகழ்ச்சிகளின் அடிப்படையில் இக்கதைதோன்றி நாளாவட்டத்தில் வளர்ந்திருக்கவேண்டும். காதலனைப் பிரிந்த துயரைத் தாங்குவதற்கு இயலாத திருமாவுண்ணி,

மூலை ஒன்றை அறுத்தெறிந்தாளென்று சங்க நூலான நற்றிணையில் (216-ம் பாட்டு) வரும் செய்தி இந்தக் கதையைப் பற்றியதாகலாம். 'திருமாவுண்ணி என்பது கண்ணகி கதையைக் குறிக்கின்றது போலும்' என்று பழைய உரை கூறுவதும் கருதத்தக்கது. கொலையுண்ட கணவன் நிலைகண்டு ஒருத்தி பாடியதாக ஒரு பழைய செய்யுள் யாப்பருங்கலவிருத்தியில் காணப்படுகிறது. இது பத்தினிச் செய்யுள் என்றே பெயர்பெறும். சிலப்பதி காரத்துக்குப் பின்பும் கதை வளர்ந்தது. "இவள் துர்க்கையாகவே பிறந்தாள்" என்று சிலப்பதிகாரம் சொல்லாத ஒன்றை அதன் அரும்பத உரைகாரர் (வேட்டுவ வரியில்) கூறுவார். அவள் மலையாள பகவதியாகி பின்னர் திருவொற்றியூரை அடைந்து வட்டபுரியம்மனாகி வழிபாட்டுக்கு உரியவளானாள் என்று இளங்கோவடிகள் கூறாத சேதியைக் கோவிலன் கதை என்ற நாட்டுப் பாடல் கூறும்.

தன் உயிர்த் தத்துவத்தால் தலைமுறைக்குத் தலைமுறை வலிவும் பொலிவும் பெற்று வளர்ந்த கதையால், வழிபாட்டுக்கு உரிய நிலையினை கண்ணகி எய்தவே, பத்தினி வழிபாட்டு முறையினைச் சேரன் செங்குட்டுவன் நிறுவியிருக்கக்கூடும். பலகாலம் பாணர் நாவில் வளர்ந்த கதைப்பாட்டு, இளங்கோவடிகளது வளமார்ந்த மனோ பாவனையில் சிலப்பதிகாரமாகப் புத்துருப் பெற்றிருக்க வேண்டும்.

வரலாற்று நவீனங்களில் கதைக்குரிய காலத்தின் சுற்றுணர்ச்சி நுண்ணயத்தோடு வெளியீடு பெறுகிறதல்லவா? அதேபோல், சங்ககாலத்துக்குரியதாக அமைந்துள்ள இக்கதை அக்காலத்தின் உயிர்த்துடிப்பை அருமையாகப் புலப்படுத்துகிறது. பார்க்கப்போனால் சங்க காலத்தின் சிறந்த பண்புநலன்களைப் போற்றவும், அதில் படித்த கேடுகளை அகற்றும் நோக்கிலேயே புதிய சகாப்தம் தோன்றியதென்பதை நிறுவவும், ஆசிரியர் சிலப்பதி

கார வாயிலாக முயன்றிருக்கிருர். இதனைப் பின்னர் எடுத்துக் காட்டுவோம்.

காளிதாசனது நாடகத்தில் சகுந்தலையே தலைமைப் பாத்திரமாகத் திகழ்வதைப் போல, இளங்கோவடிகளது காப்பியத்தில் கண்ணகியே தலைமைப்பாத்திரமாகிருள். எனவே, பெண்ணுக்குப் பெருமைதரும் அருமைக்குரியது என்று இதனைப் போற்றுவோம். சோழநாட்டுப் பெண்ணுகிய கண்ணகி, பாண்டியனைச் சிலம்பால் வென்று, கொங்கை ஒன்ருல் கூடல் நகரை அழித்து, வஞ்சியில் பத்தினித் தெய்வமாகிருள். மண்ணக மாதர்க்கு அணியான அவள் விண்ணக மாதர்க்கு விருந்தானுள். சேர, சோழ, பாண்டிய நாடுகளை ஒன்ருக இணைக்கும் சின்னமாகக் கண்ணகி வளர்வதால், சிலப்பதிகாரம் தமிழகத்தின் தேசியக் காப்பியமாகத் திகழ்கிறது. ஆனுல் பூத உடல் நீத்துத் தெய்வமான கண்ணகி அனைத்திந்திய ஒற்றுமைக்கே சின்னமாகி விடுகிருள். அவளது சிலை இமயத்தில் பிறந்து கங்கையில் புனலாடிச் சேரநாட்டில் எழுந்தருளுவதில் இந்திய ஒற்றுமைக் கருத்து வெளியீடு பெறுகிறது. இதனை வாழ்த்துக் காதையில் கண்ணகியின் தோழியான தேவந்தி எடுத்துரைப்பாள் :

முடிமன்னர் மூவரும் காத்தோம்பும் தெய்வ
வடபேர் இமய மலையில் பிறந்து
கடுவரல் கங்கைப் புனலாடிப் போந்த
தொடிவளைத் தோளிக்குத் தோழிநான் கண்டீர்
சோணுட்டார் பாவைக்குத் தோழிநான் கண்டீர்!

கோவலன் சிறந்த பண்புகளுக்கு உரியவன் என்பது மாடலன் பேச்சால் விளக்கம் பெறுகிறது. மரணத்தைத் திரணமாக மதித்து வேழத்திடமிருந்து வேதியனையும் பூதத்திடமிருந்து புல்லனையும் காக்க முயன்ற உயர்ந்தோன் அவன். அத்தகைய தலைவன், மனைவியைத் தனிமைத் துன்பத்தில் ஆழ்த்திவிட்டு மாதவியிடம் செல்

கிறுன். அப்போதைக்கப்போது அவளையும் பிரிந்து காமுகரோடு திரிகிறுன். இதனே, "குரல்வாய்ப் பாணரொடு, நகரப் பரத்தரொடு, திரிதரு மரபின் கோவலன்போல" என்ற உவமையால் அடிகளே ஓதுவார். கோவலனும், புதுப்புது காமச்சுவை நாடிய தூர்த்தரோடு கூடித் தான் கெட்டலேந்ததைக் கண்ணகியிடம் வருந்திக் கூறுவான் (கொலைக்களக் காதை). கோவலன் இவ்வாறு கெட்டதற்குச் சமுதாயச் சூழலே காரணம். இந்திர விழாக் காலத்தில், நடுவீதியிலேயே நகரநம்பியர் பொதுமகளிரைத் தழுவும் அளவுக்குச் சமுதாயம் கெட்டிருந்தது. மதுரையில் தன்குலத்தவரைக் காணச்சென்ற கோவலன் பொதுமகளிர் சூழலேயே கண்டான் என்று கதை அமைத்து, மதுரையும் பூம்புகாரின் மறுபதிப்பே என்பதை உய்த்துணரவைக்கிறுர் ஆசிரியர். நாடக மகளிரின் ஆடலில் அரசன் ஈடுபட்டானென்று பாண்டிமாதேவி ஊடியதிலும், மதுரைச் சூழலே ஒருவாறு புரியலாம். ஆக, மதுரை எரிகிறதென்றுல் தசையின் நசையால் வசையுற்ற சமுதாயம் அழிகிறதென்பதே பொருள். இவ்வாறு, சங்ககால நாகரிகம் இறுதியில் கேடுற்றதையும் அழிந்ததையும் சிலப்பதிகாரம் புலப்படுத்துகிறது.

சங்ககாலத் தமிழர் போற்றிய வீரமும் இறுதியில் விவேகமற்றதாக மாறியதைச் செங்குட்டுவனது செயல்களில் காணலாம், தவக்கோலம் பூண்டு ஓடிய கனக விசயர்களேப் பிடித்து கண்ணகியின் படிமையைத் தூக்கி வரச் செய்தானென்று செப்பி, வீரத்துக்கு ஏற்பட்ட களங்கத்தைக் காட்டுவார் அடிகள். சோழ பாண்டியர்கள் செங்குட்டுவனது செயலே இழித்துரைத்தனரென்றும், அதுகேட்டுக் கோபம் கொண்ட செங்குட்டுவன் மாடலன் நல்லுரையால் திருந்திஞனென்றும், அதன் பின்பு அவன் ஆரிய அரசர்களே விடுதலே செய்ததோடு சிறைச்சாலேயையே இடிக்கவும், குடிகள் செலுத்தும் வரிகளே வாங்காதிருக்கவும் உத்தரவிட்டானென்றும் அடி-

கள் கதையை நடத்துவார். இவ்வாறு திருந்திய செங்குட்டுவனே கண்ணகி கோயிலுக்குச் செல்கிருன். அங்கு ஆரிய அரசர்முதலாக இலங்கை வேந்தன் கயவாகு ஈருக அனைவரும் தத்தம் நாட்டுக்கு எழுந்தருள வேண்டுமென்று கண்ணகியை வேண்ட, "அவ்வரம் தந்தேன்" என்று அசரீரி கூற, இந்திய–இலங்கை ஐக்கியத்தின் சின்னமாகக் கண்ணகி ஓங்கி உயரும் நிலையில் காவியம் நிறைவு பெறுகிறது.

முதல், இடை, கடை என்ற உறுப்பழகும், உறுப்புக்கள் இசைந்து பொருந்தப் பெற்ற ஒருமை நயமும், காப்பியப் போக்கின் நாடகப் பாங்கும், உணர்ச்சி வேகமும், பாத்திரப் படைப்பின் வெற்றியும், வரிப்பாட்டுக்களின் சுவையும் சிலப்பதிகாரத்தின் வேறு சில சிறப்புக்களாம்.

இளங்கோவடிகள் சமணரே என்பதைக் காவியம் மெய்ப்பிக்கிறது. ஆயினும், வள்ளுவரைப் போலவே அடிகளும் எச்சமயத்தினரையும் ஈர்க்கும் வகையில் தம் கவிதையை அமைத்திருக்கிருர். மாந்தர் அனைவரையும் தழுவி அறநெறியில் செலுத்தும் அகன்ற நோக்குக்குரிய கலைநலத்தின் கருவூலமாக அமைந்தது சிலப்பதிகாரம்.

## மணிமேகலை

கணிகையர்குல நங்கை தவஒழுக்கத்தால் அடையும் சிறப்பை மணிமேகலை ஓதுகிறது. பௌத்த மதக் கருத்துக்களைப் பலவழியாலும் எடுத்துச் சொல்லி, அச்சமயத்தைப் பெருமைப் படுத்துகிருர் ஆசிரியர்.

பசிப்பிணியின் கொடுமையினை படிப்போர் மனத்தில் பதியும்படி பகர்வது மணிமேகலை ;

குடிப்பிறப்(பு) அழிக்கும் ; விழுப்பம் கொல்லும் ;
பிடித்த கல்விப் பெரும்புணை விடுஉம் ;
நா(ண்)அணி களையும் ; மா(ண்)எழில் சிதைக்கும்,
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி என்னும் பாவி.

எனவே, பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும் பசிப்பிணி மருத்துவமே தலையாய அறமென்பார் அறவண அடிகள் :

மக்கள் தேவர் எனஇரு சார்க்கும்
ஒத்த முடிவின் ஓ(ர்)அறம் உரைக்கேன் ;
பசிப்பிணி தீர்த்தல் என்றே அவரும்
தவப்பெரு நல்லறம் சாற்றினர்....

புண்ணிய ராஜனிடம் மணிமேகலை அறத்துக்குத் தரும் வரைவிலக்கணமும் இவ்வாறே அமைகிறது :

அறமெனப் படுவது யாதெனக் கேட்பின்
மறவா(து) இதுகேள் ; மன்னுயிர்க் கெல்லாம்
உண்டியும் உடையும் உறையுளும் அல்லது
கண்டது இல்...

அமுதசுரபி என்ற பாத்திரத்தின் உதவியால் அற்ருர் அனைவர்க்கும் அன்னம் இட்டுக் காத்தாள் மணிமேகலை என்று கதை அமைத்து வறியார்க்கு வழங்கும் நல்லறத்தைப் போற்றுகிருர் சாத்தனுர்.

கலைஞராக நில்லாது சமயப் பிரசாரகராக மாறிப் பிற மதங்களைப் பழித்துப் பேசும் வெறுப்பான போக்கினையும் இனிய தமிழிலமைந்த மணிமேகலையில் காண்கிருேம்.

## சில செய்திகள்

பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப

என்று தொல்காப்பியர் கூறியபடி சங்கம் மருவிய காலத்தில் வைதிகச் சடங்குகள் தமிழர் திருமணத்தில் பெரு வழக்காயின. இதனை,

மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலம் செய்வது காண்பார்கண் நோன்பென்னை !

என்று கண்ணகி—கோவலன் திருமணத்தைப் பற்றி அடிகள் பாடுவதிலிருந்து அறியலாம்.

இந்திரனைத் தலைமைத் தேவனுகப் போற்றும் ரிக் வேதம். அந்த இந்திரனது விழாவைத் தமிழர்கள் தேசியத் திருவிழாவாகக் கொண்டாடினர் என்பதனை இரு காப்பியங்களிலிருந்தும் அறியலாம். இந்திய மக்களது உள்ளக் கிளர்ச்சியின் ஒருமைப்பாடு இவ்வாறு வெளியீடு பெற்றது.

காவிரிப்பூம்பட்டினத்தில் சமயவாதிகள் பட்டி மண்டபங்களில் தர்க்கம் செய்தனரென்று மணிமேகலை மொழியும். பலவகைச் சமயவாதிகள் மணிமேகலையிடம் தத்தம் சமயப் பொருட்களை எடுத்துரைத்தன ரென்று விவரிக்கப்படுவதிலிருந்து தமிழகத்தில் தத்துவ அறிவு பெருகியிருந்ததைப் புரிகிறோம்.

நுண்கலைகள் எய்திய சிறப்பினைச் சிலப்பதிகாரம் புலப்படுத்துகிறது.

## கவிதை

சங்கம் மருவிய காலத்தில் தமிழின் ஒலிகள் நெகிழ்ந்து இசையுடன் பாடத்தக்க பாவினங்கள் தோன்றின. கலிப்பாவும் பரிபாடலும் இங்ஙனம் அமைந்தவையே. இவை எதுகைமோனைகள் இணைந்துவர, இசையும் தாளமும் அமையச் சொல்லழகும் பொருளழகும் பெற்று விளங்குகின்றன.

தமிழர் தம் சிந்தனைச் சிறப்புக்கு எடுத்துக்காட்டெனத் திகழும் நீதி நூல்கள் வெண்பாவில் அமைந்தவை.

ஆசிரியப்பா, கலிப்பா, உரைப்பாட்டு, வரிப்பாட்டு ஆகியவற்றால் அமைந்தது சிலப்பதிகாரம். ஆசிரியப்பா ஒன்றால் அமைந்தது மணிமேகலை.

# 4. பக்தி நூல்களின் காலம் (கி.பி. 500-850)

ஏழாம் நூற்றுண்டில் தோன்றிய இந்து சமய மறுமலர்ச்சி, ஜனரஞ்சிதமான பக்தி இலக்கியத்தைப் படைத்து, தமிழ் மக்களுக்குப் புதிய தெளிவும் தெம்பும் தந்தது. இந்த மறுமலர்ச்சிக்குத் தலைமைதாங்கிய சைவ நாயன்மார்களும் வைணவ ஆழ்வார்களும் தத்தம் கருத்துக்களைப் பரப்பும்போதே, சமண, பௌத்த மதங்களை எதிர்ப்பதில் ஒன்றுபட்டு உழைத்தனர்.

## மறுமலர்ச்சியின் அடிப்படை

பாரத சமுதாயத்தில் இரண்டறக் கலந்த பல்வேறு இனங்களது நம்பிக்கைகளும் நினைவுகளும் கடவுளரும் கூடி உறவாடியதால் உண்டானதே இந்து சமயமாகும். எனவே, மரபைப் போற்றும் இயல்புக்குரிய மக்கள் இந்துமத மறுமலர்ச்சிக்குப் பேராதரவினை அளித்ததில் வியப்பில்லை.

ஒருவன் தன் வினையின் பயனை அனுபவித்தே ஆக வேண்டும் என்ற வினைச் சட்டமும், மறுபிறப்புக் கொள்கையும் உபநிடதங்கள் வகைந்து கூறினவே ஆம். அந்த இரு கொள்கைகளையே அடிப்படைகளாகக் கொண்ட சமண பௌத்த மதங்களைப் புறச் சமயங்கள் என்பதைக்

காட்டிலும் சீர்திருத்த மதங்கள் என்பதே ஏற்புடைத்தாகும். ஒழுக்கத்தின் விழுப்பம், மக்களின் சமத்துவம் என்ற அவற்றின் சீர்திருத்தக் கருத்துக்கள் இந்துமத மறுமலர்ச்சியில் ஏற்றம் கொண்டதால், சமணத்துக்கும் பௌத்தத்துக்கும் அடிப்படை இல்லாது போனது.

வாழ்வில் முழுமையும் வளமும் காண விழைவது மனித இயல்பு. ஆனால் வாழ்வைத் துன்பக்கேணியாகக் கருதிய சமண பௌத்த மதங்கள், ஆடல் பாடல் அனைய கலைகளை இழித்து ஒதுக்கின. எனவே, பல்கலைச் செல்வத்தைப் படைத்துத் துய்ப்பதற்கு அறவழியில் பின்பலம் அமைத்த பக்தி இயக்கம், மக்கள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது இயல்பே.

அரசரும் வணிகரும் தந்த ஆதரவால், சமண பௌத்தப்பள்ளிகள் பொருளாதாரத் துறையில் மேம்பட்டன; அவை பெரும் நில உடைமை நிறுவனங்களாக, சுரண்டல் கேந்திரங்களாக, ஊழலின் உறைவிடங்களாக மாறின என்பதைப் பல்லவ வேந்தன் மகேந்திரவர்மன் ஆக்கிய மத்தவிலாசப் பிரகசனம் புலப்படுத்துகிறது. அதனால்தான் பக்தி இயக்கச் சான்றோரும், "அல்லல்சேர் ஈனர்கள்," என்றும் "பொய்த்த வன்தவ வேடத்தர்" என்றும் பௌத்த சமணத் துறவிகளைச் சாடினர். இல்லாமையை விரும்பிப் போற்றியும், "யான், எனது என்னும் செருக்கை" நீக்கியும் வாழவேண்டிய துறவிகளது பள்ளிகள், பொருளாதாரச் சுரண்டல் களங்களானதால், அச்சமயங்கள் வெகுஜன வெறுப்புக்கு ஆளாயின.

## பக்தி இயக்கத்தின் பெருமை

சமயச் சான்றோர்கள், பக்தர்கள் புடைசூழ, ஊர் ஊராகச் சென்றனர்; புதிது புதிதாகத் தாம் யாத்த பாக்களால் ஆலயங்களில் இறைவனைப் பாடிப் பரவினர்.

வடமொழிச் சொற்களின் வரவால் நெகிழ்ச்சியும் நளினமும் சொல்வளமும் கூடுதலாகப் பெற்ற தமிழில் எளிய சொற்களை ஆண்டு, இன்னிசையும் உணர்ச்சி வேகமும் பொருளாழமும் ஒருசேரப்பெற்ற பாட்டுக்களைச் சமயகுரவர் இயற்றினர். அவற்றைக் கற்றவரோடு கல்லாதவரும் பாடிக்களித்தனர். மக்களை மனதார நேசித்துத் தொண்டு புரிந்த சமயச் சான்றோர், குடிமக்களின் இதயத்தை ஈர்த்த நாட்டுப் பாடல்களைப் போற்றினர். திருப்பாவை, திருவெம்பாவை, திருப்பள்ளி எழுச்சி, திருப்பொற்சுண்ணம் முதலியவை அந்நாளைய நாட்டுப் பாடல்கள் பெற்ற நல்லுருவங்களாகும்.

இராமாயண பாரதக் கதைகள் பக்தி இயக்கத்துக்கு ஊற்றம் அளித்தன. மாமல்லபுரத்து சிற்ப விசித்திரங்களுக்கும் காஞ்சி நகரக் கோயில்களுக்கும் இவற்றைத் தொடர்ந்து தமிழகமெங்கும் ஆலயங்கள் அமைந்ததற்கும் பக்தி இயக்கமே ஆதாரம் என்போம். ஆலயங்களில் நிகழ்ந்த விழாக்கள், ஆடல் பாடல் கலைகளுக்கும் காலட்சேபங்களுக்கும் வாய்ப்பு அளித்தன. இவ்வாறெல்லாம் பொதுமக்கள் கேள்வி ஞானத்தால் பண்படுவதற்கும், நுண்கலைகளது அறிவும் ரசனையும் பெருகுவதற்கும், ஆன்மநேய நெறியில் ஒருமனப்பட்ட எழுச்சி ஏற்படுவதற்கும், அனைத்து அம்சங்களையும் தழுவியதாக வாழ்வு நிறைவு பெறுவதற்கும், ஆடிப்பதினெட்டாம் பெருக்காகத் தமிழகத்தை ஆட்கொண்ட பக்தி இயக்கம் வகை செய்தது.

## நாயன்மார்கள்

சைவ நாயன்மார் அறுபத்து மூவர். அவர்களில் வேதியர், வேளாளர், வேடர், வண்ணார், பஞ்சமர் முதலான பலசாதியினர் உண்டு. அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் சிறப்பாகக் கொண்டாடப்பெறுவர்.

வாகீசர் என்றும் நாவுக்கரசர் என்றும் அழைக்கப் பெறும் அப்பர், முதலாம் மகேந்திரவர்மன் காலத்தவர். சமணராயிருந்து பின்னர் சைவரான அப்பர், மகேந்திர வர்மனையும் சமணத்திலிருந்து சைவத்துக்கு மாறச்செய் தார். இவர் பல தலங்களைப் பற்றிப் பாடிய மூவாயிரத் துக்கு மேற்பட்ட பாக்கள் சைவத் திருமுறையில் இடம் பெற்றுள்ளன.

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே

என்று மனமகிழ்ந்து பாடியவர் அப்பர்.

குலமென்றும் கோத்திரமென்றும் உயர்வு தாழ்வு பாராட்டும் தீமையினைச் சாடும் நாவுக்கரசர்,

அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பர் ஆகில்
அவர் கண்டீர் நாம் வணங்குங் கடவு ளாரே!

என்று பாடுகிறார்.

அப்பரின் பதிகங்களில் தாண்டகங்கள் இதயத்தைக் கனியச் செய்வன; ஆதலின் இவரைத் தாண்டக வேந் தர் என்று பாராட்டுவர். இவர் தாசமார்க்கத்தில் நின்று இறைவனை வழிபட்டார் என்பர். பல காலம் உலகில் இன்ப துன்பங்களை நுகர்ந்தவராதலின், அனுபவத்துக் குரிய பல கருத்துக்களை இவரிடம் கேட்கலாம்.

ஞானசம்பந்தர் தம் மூன்றாவது ஆண்டிலேயே பார்வதி தேவியிடம் ஞானப்பால் உண்டு சிவஞானம் பெற்றுப் பாடத் தொடங்கினார் என்பர். அப்பரைப் போலவே சம்பந்தரும் பல தலங்கள் சென்று இறைவ னைப் பாடினார். சமணத்தின் நிலைக்களமாகவிருந்த

பாண்டிய நாட்டில் சமணரை வாதில் வென்றார்; பாண்டியனைச் சைவனாக்கினார்.

சம்பந்தர் தம்மைத் தமிழ் விரகர் என்று கூறிக்கொள்வார், "நல்லிசை ஞானசம்பந்தன்" என்பார் சுந்தரர். நிமிர்ந்த நடையில் பெருமிதத்துடன் பாடப்பெற்ற அவரது பதிகங்கள் தமிழ் வளத்திலும் பண்ணமைதியிலும் சிறந்து விளங்குகின்றன. சம்பந்தர் சற்புத்திர மார்க்கத்தில் நின்று இறைவனை வழிபட்டாரென்பர்.

ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக்குப்பின் தோன்றிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடிய பதிகங்கள் ஏழாவது திருமுறைக்கு உரியன. இவர் சிவபெருமானைத் தமிழாகவும் ஏழிசையாகவும் இசைப் பயனாகவும் தோழனாகவும் குறிப்பார். இவர் தம்பிரான் தோழன் எனப்படுவார். திருவாரூரில் இவர் பாடிய திருத்தொண்டத் தொகை அறுபத்திரண்டு நாயன்மார்களைக் குறிப்பிடுகிறது. சுந்தரரையும் சேர்த்து அறுபத்திமூன்று நாயன்மார்களென்போம். சுந்தரரின் தோழரான சேரமான் பெருமாள் திருவாரூர் மும்மணிக் கோவையை இயற்றினார். மேலும் அவரது திருக்கைலாய ஞான உலா, உலா இலக்கியத்தின் முதல் நூலாகும்.

ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் திருவாதவூரில் அவதரித்த மாணிக்கவாசகரது திருவாசகம் எட்டாம் திருமுறையாகும் "திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்" என்பது பழமொழி. நாயக நாயகி பாவத்தில் பாடப்பெற்ற திருக்கோவையைத் திருவாசக ஆசிரியர் தலையில் ஏற்றுவது கொடுமையே என்பது தேர்ந்த திறனாய்வாளர் முடிவு.

வாதாபியில் வெற்றிகண்ட பரஞ்சோதி துறவறம் பூண்டு சிறுத்தொண்டர் ஆனார். அவர் சம்பந்தரின் சீடராகச் சிறந்தார். காரைக்காலம்மையார், ஐயடிகள்

காடவர்கோன், காரி முதலியோரும் பக்தி இயக்கத்தில் பங்கு பற்றிய சைவச் சான்றோர்களாவர்.

திருமூலர் இயற்றிய திருமந்திரம் பத்தாம் திருமுறையாக அமைந்துள்ளது. எளிதில் புரிய முடியாத மூவாயிரம் செய்யுட்களை உடைய இந்நூலைச் சைவர்கள் மிகுந்த பக்தி சிரத்தையுடன் போற்றுவர்.

## ஆழ்வார்கள்

வைணவ ஆழ்வார்களது பாசுரங்கள் நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் தொகுக்கப்பெற்றுள்ளன. பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகியோர் முதலாழ்வார்கள். முதலாம் மகேந்திரவர்மன் காலத்தவரான திருமழிசை ஆழ்வாரின் பாசுரங்களில் புறச்சமயங்களைச் சாடும் போக்கினைக் காணலாம். எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருமங்கை ஆழ்வார் சிறந்த பக்தராகவும் கவிஞராகவும் திகழ்ந்தார். பெரியாழ்வார் திருமொழி, திருப்பல்லாண்டு என்ற நூல்களை இயற்றிய பெரியாழ்வார், கண்ணனுடைய குழந்தைப் பருவத்தைப் பிள்ளைத் தமிழாகப் பாடியுள்ளார். பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தத்துக்கு இவரது நூலே தொடக்கமாகும். பெரியாழ்வார் கண்டெடுத்து வளர்த்த பெண்மணியான ஆண்டாளின் திருப்பாவை, உபநிடத சாரம் என்று போற்றப்பெறும். இறைவனை உடனே அடையவேண்டுமென்ற அவரது காதல் வெள்ளப் பெருக்கே நாச்சியார் திருமொழி ஆகும். பாடுவோரையும் கேட்போரையும் பக்திப் பரவசம் கொள்ளச் செய்வதற்கு கிருஷ்ணன் கதைகளை அருமையாக ஆள்கிறார் ஆண்டாள். திருப்பாணாழ்வாரும், தொண்டரடிப்பொடியாழ்வாரும், குலசேகராழ்வாரும் அடுத்துக் குறிப்பிடத்தக்கவர்கள். காலத்தால் கடைசியில் தோன்றிய ஆழ்வார்கள் நம்மாழ்வாரும் அவரது சீடரான மதுரகவியும் ஆவர். ஆழ்வார் திருநகரியில் அவதரித்த நம்மாழ்வார் அருளிய ஞானச்

செல்வத்தின் பயனே ராமானுஜ சித்தாந்தம் என்பர். அவரது பாசுரங்கள் கவிதை நயத்திலும் சிறந்து விளங்கு கின்றன. அடுத்த சகாப்தத்தின் முதல் ஆச்சாரியரான நாதமுனி, நம்மாழ்வாரின் சீடர் என்பர்.

## உலக இயல் நூல்கள்

பக்தி இயக்கக் காலத்தில் எழுந்த சில பொது நூல் களை இனி நோக்குவோம். கொங்குவேளிர் என்ற சமண சமயச் சான்றோர் எழுதியது பெருங்கதை. பைசாசி மொழியில் குணாட்டியர் இயற்றிய பிருகத் கதைக்குக் கங்க அரசனான துர்விநீதன் செய்த வடமொழி ஆக்கமே தமிழ்ப் பெருங்கதையின் மூலம் என்பர். இலக்கியச் சுவை நிறைந்த இதன் சில பகுதிகளே இப்போது கிடைத் துள்ளன. பல்லவ மன்னன் மூன்றும் நந்திவர்மனின் காலத்தவரான பெருந்தேவனார் இயற்றிய பாரத வெண்பா விலும் பல பகுதிகள் கிடைக்கவில்லை.

பல்லவ அரசன் மூன்றும் நந்திவர்மனைப் பற்றி எழுந்த நந்திக் கலம்பகமே கலம்பக இலக்கியத்தில் காலத்தால் பழமையானது. வரலாற்றுக் குறிப்புக்கள் உடைய இந்நூலின் ஆசிரியர் யாரென்பது தெரியவில்லை. இலக்கியச் சுவை கனியும் பல பாடல்கள் இதில் உள. அவற்றில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது பாணனைத் தலைவி இகழ்ந்துரைக்கும் பாட்டாகும்.

ஈட்டுபுகழ் நந்திபாணநீ! எங்கையர்தம்
வீட்டிருந்து பாட விடிவளவும்—கேட்டிருந்தோம்;
பேயென்றாள் அன்னை, பிறர்நரியென்றார், தோழி
நா யென்றாள், நீ என்றேன் நான்.

*(எங்கை என்பது இங்கு பரத்தையைக் குறிப்பது)*

மூவேந்தர் புகழ்பாடும் முத்தொள்ளாயிரம் இக் காலத்துக்கு உரியது என்பர். 900 பாட்டுகளில் 109 செய்யுட்களே கிடைத்துள்ளன. மனத்தைவிட்டு அக

லாத முறையில் களம், பாத்திரம், உணர்ச்சி, கவி உருவம் எல்லாம் அமைந்து விளங்கும் இப் பாடல்களின் சிறப்பைத் தமிழகம் உணரச் செய்தவர், ரசிகமணி டி. கே. சி. அவர்களே.

அதியமானுக்குரிய தகடூர்மீது சேரன் படையெடுத்துச் சென்ற வரலாற்றைக் கூறிய தகடூர் யாத்திரை இக் காலத்தே எழுந்தது. அதன் செய்யுட்களில் சிலவே கிடைத்துள்ளன.

# 5. பொற்காலம்
## (850—1200)

விஜயாலய சோழர்களின் காலம் தமிழர் பண்பாட்டின் பொற்காலமாகும். தமிழகம், தன் வரலாற்றிலேயே முதன் முதலாக, ஒரு குடை நிழலில் ஒன்றுபட்டு உயர்வுற்றது; பரத கண்டத்தின் பெரும் பகுதியில் பேரரசைப் படைக்கும் முயற்சியில் சோழ மன்னர்கள் சிறப்பான வெற்றி அடைந்தனர். பொருள் உற்பத்தித் துறைகள் புதிய பொலிவும் வலிவும் பெற்றன; பாரதம் கண்ட தன்னேரில்லாத தத்துவ ஞானியான சங்கரர் (788—820). மறைமுடியான உபநிடதங்களை அடிநிலமாகக்கொண்டு ஆக்கி அருளிய அத்வைத தத்துவம், அறிவு வளர்ச்சிக்கும் அனைத்து ஆன்மாக்களும் ஒன்றே என்ற உணர்வின் வளர்ச்சிக்கும் வழி செய்தது. பல கலைகளும் மலர்ந்து மணம் வீசின. சிவாலயங்கள் எழுந்தன; கைத்திறனும் கற்பனை வளமும் மிகுதியாகப் பெற்ற சிற்பிகள் அற்புதங்கள் இயற்றினர்; இந்தியக் கலையின் சிகரமான நடராஜர் விக்கிரகம் வடிவெடுத்தது. பக்தி இயக்கம் கண்ட பண்ணமைந்த பாடல்களின் வழியில் விருத்தப்பா அமைந்தது. தமிழர் மேதாவிலாசத்

தவப்பயனாகத் தோன்றிய கம்பன், உலகப் பெருங்காப்பியங்களுடன் ஒப்பிடத்தக்க இராமாவதாரத்தை இயற்றினான்.

## லௌகிக காவியங்கள்

இக்காலத்தின் முற்பகுதியில் தோன்றிய ஜைன காவியமான சீவக சிந்தாமணியை இயற்றியவர் திருத்தக்க தேவர். சீவகனைத் தலைவனாகக்கொண்டு, 3,154 விருத்தப்பாக்களில் அமைந்த இக்காவியம் வடமொழிக் கதையின் வழியில் எழுந்த நூலாகும். சொல்லாட்சியாலும் ஓசை நயத்தாலும் கருத்துக்கும் களத்துக்கும் உணர்ச்சிக்கும் ஏற்ற செய்யுள் வகைகளைப் பயன்படுத்துவதாலும், படிப்போர் இதயத்தை ஈர்க்கும் காப்பியம் இது. காப்பிய அமைப்பிலும் பாத்திரப் படைப்பிலும் குறையுண்டு; போக வர்ணனைகள் மிகுதியாக உள்ளன; சீவகன் இறுதியில் துறவு பூண்டு வீடு பேற்றினை நாடுவது உண்மையே என்றாலும், எட்டு மகளிரை மணந்த அவன் முன்மாதிரியாகக் கொள்ளத்தக்கவன் அன்று. இத்தகைய குறைகள் இருந்தபோதிலும் தனித்தனிச் செய்யுட்களின் நயம் உள்ளத்தைக் கொள்ளைக்கொள்கிறது.

சிந்தாமணியை அடுத்துத் தோன்றிய சூளாமணியும் ஜைன காப்பியமே. தோலாமொழித் தேவர் ஆக்கிய இந்நூல் கதைப் பொருளிலும் கதை அமைப்பிலும் செய்யுளின் இனிமையிலும் சொல்லழகு இனிமை முதலியவற்றிலும் சிந்தாமணியை வென்றுவிடுகிறது என்பார் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை. சூளாமணியிலும் அகப்பொருள் விஷயங்கள் மிகுதியாய் வந்துள்ளன.

குண்டலகேசி என்று காப்பியத் தலைவியின் பெயரால் அமைந்த பௌத்த காப்பியமும் பத்தாம் நூற்றாண்டில் தோன்றியதே. இதன் செய்யுட்கள் சிலவே இப்போது கிடைத்துள்ளன. இது அகலக் கவி (விஸ்தாரக்

கவி) என்று வீர சோழிய உரை கூறுவதால், விஸ்தாரக் கவியின் இலக்கணத்தைக் கருதுங்கால், குண்டலகேசியைப் பல கலைகளோடு பொருந்தப் பாடிய முத்தமிழ்க் காப்பியமெனலாம் என்பார் வையாபுரிப்பிள்ளை.

இதனைத் தொடர்ந்து பெண்ணின் பெயருள்ளதாகத் தோன்றிய ஜைன காப்பியமே வளையாபதி. இதன் செய்யுட்களும் சிலவே கிடைத்துள்ளன. வளையாபதியின் கவியழகில் ஒட்டக்கூத்தர் பெரிதும் ஈடுபட்டார். குண்டலகேசிக்கு மறுப்பாகத் தோன்றிய சமண நூலான நீலகேசியில் இலக்கியச் சுவை குறைவு; பௌத்தத்தை பழித்து இகழ்வதே அதிகம்.

சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி, குண்டலகேசி, வளையாபதி ஆகியவற்றை ஐம்பெரும் காப்பியங்கள் என்று வழங்குவது மரபானது; அதனைத் தொடர்ந்து, சூளாமணி, நீலகேசி ஆகியவற்றோடு மேலும் மூன்றைச் சேர்த்து ஐஞ்சிறு காப்பியங்கள் என்று வழங்கும் முறை பிற்காலத்தில் ஏற்பட்டதென்பர்.

## கல்லாடர்

கல்லாடம் என்ற அகப்பொருள் இலக்கியம் இக்காலத்தே எழுந்ததாகலாம். இதனை இயற்றிய கல்லாடரே பதினோராம் திருமுறையில் இடம்பெறும் கல்லாட தேவ நாயனார் என்பர். பொய்க்கால் நடையும் அகத்துறை விளக்கத்தின் செயற்கை நலமும் கல்லாடத்தின் குறைகள் எனலாம். மதுரையில் நடந்த பல திருவிளையாடல்களைப் பற்றிக் கூறும் இந்நூல்; நுண்கலைச் செய்திகளும் இதில் உள்ளன. ‘கல்லாடம் கற்றவனோடு மல்லாடாதே’ என்பது பழமொழி.

## சயங்கொண்டார்

1070 முதல் 1120 வரை சோழ சக்கரவர்த்தியாக விளங்கிய முதற் குலோத்துங்கன் கலிங்கப் போரில்

அடைந்த வெற்றியைப் பாடுவதே கலிங்கத்துப்பரணி. குலோத்துங்கனது அவைக்களப் புலவரான சயங்கொண்டார் இதனை இயற்றினர். அவர் கவிச்சக்கரவர்த்தி என்ற பட்டம் பெற்றவர். சொல்லாட்சியிலும், தாம் சித்திரிக்கும் நிகழ்ச்சிக்கேற்ற யாப்பு வகைகளை ஆள்வதிலும் சயங்கொண்டார் புலப்படுத்தும் திறன் சொல்லும் தரமன்று, "பரணிக்கோர் சயங்கொண்டான்" என்று அறிஞர் புகழ்வதில் வியப்பில்லை.

## ஒட்டக்கூத்தர்

மற்றொரு கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தராவர். முதற்குலோத்துங்கனது மகன் விக்ரம சோழனுக்கும் அவனது மகன் இரண்டாம் குலோத்துங்கனுக்கும் அவனது மகன் இரண்டாம் இராசராசனுக்கும் அவைக்களப் புலவராயிருந்தார் அவர். அம்மூன்று சோழரைப் பற்றியும் தனித்தனியே உலாப்பாடியிருக்கிறார். விக்கிரம சோழனது கலிங்கப் போரைப் பற்றி இவர் பாடிய பரணி இக்காலத்தில் கிடைக்கவில்லை. தக்கன் பரமசிவனை அவமதித்துச் செய்த யாகத்தை வீரபத்திரக் கடவுள் அழித்தாரென்ற கதையை எடுத்துரைக்கும் தக்க யாகப் பரணியும் இவர் பாடியதே. இரண்டாங் குலோத்துங்கன்மீது இவர் பாடிய பிள்ளைத்தமிழ் சொற்சுவையும் இன்னிசைக்குரிய சந்த அமைப்பும் உடையதாகும். பிள்ளைத் தமிழ் வகைப் பிரபந்தத்துக்கு முதல் நூலாக உள்ள இதுவே கூத்தரின் தலைசிறந்த படைப்பு என்போம்.

## சமய நூல்கள்

இனிச் சமய நூல்களை நோக்குவோம். ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த நம்பியாண்டார் நம்பி என்ற பெரியார் மூவர் பாடிய தேவாரப் பாசுரங்களையும் ஏனைய

சமய குரவரது திருப்பாடல்களையும் தொகுத்துப் பதினொரு திருமுறைகளாக வகுத்தார். அவர் ஞான சம்பந்தரை ஆறு பிரபந்தங்களிலும் அப்பரை ஒரு பிரபந் தத்திலும் பாடியிருக்கிறார். மேலும் சுந்தரர் இயற்றிய திருத்தொண்டத் - தொகையினை அடிப்படையாகக் கொண்டு நம்பி அவர்கள் இயற்றிய திருத்தொண்டர் திருவந்தாதியே சேக்கிழாரின் பெரிய புராணத்துக் குக் கருவாக அமைந்தது. ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த பட்டினத்தடிகளது ஐந்து நூல் களும் பதினோராம் திருமுறையில், நம்பியாண்டார் நம்பி யின் படைப்புக்களோடு, இடம் பெறுகின்றன. முதலாம் பராந்தக சோழனது மைந்தரான கண்டராதித்தரின் திருப் பதிகம் ஒன்பதாம் திருமுறையில் உள்ளது.

இரண்டாம் குலோத்துங்கன் காலத்தவரான சேக் கிழார் பெரிய புராணத்தில் அறுபத்துமூன்று அடியார்க ளது வரலாற்றைக் கூறுகிறார். தேவார திருவாசகத்தில் ஈடுபட்டு வாழ்ந்த இப்பெரியாரின் தத்துவஞானம் இப் புராணத்தில் விரவி நிற்கிறது. தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளைப் பற்றி அவர் நன்கறிந்திருந்த உண்மையும் கல்வெட்டுக்கள் முதலானவற்றில் அவருக்கிருந்த பயிற் சியும் அவரது இலக்கியத்தில் விளக்கம் பெறுகின்றன. விருத்தப்பாவை லாகவமாகக் கையாளும் சேக்கிழாரது நூல் தமிழ் இலக்கியத்துக்குக் கிடைத்த சிறந்த அருட் கொடைகளில் ஒன்றாகும்.

ஆழ்வார்களது பாசுரங்களைத் திவ்யப் பிரபந்தமாகத் தொகுத்த நாதமுனி இக்காலத்தில் வாழ்ந்தார். அவரும் அவரது பெயரன் ஆளவந்தாரும், இராமானுஜரும் வட மொழியிலேயே தம் நூல்களை எழுதினர்.

## இலக்கணங்கள்

இனி இலக்கணத் துறையினை நோக்குவோம்; யாப்பருங்கலமும் அதன் சுருக்கமான யாப்பருங்கலக்

காரிகையும் பத்தாம் நூற்ருண்டின் இறுதியில் வாழ்ந்த சமணத் துறவியான அமிதசாகரர் இயற்றியவை. செய்யுள் இலக்கணத்தைக் கூறும் இந்நூல்களுக்குத் தெளிவான உரைகளுண்டு. எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐந்திலக்கணத்தையும் சுருக்கமாகக் கூறும் வீரசோழியம், புத்தமித்திரர் இயற்றியதாகும். தமிழ் மரபோடு வடமொழி விதிகளேயும் தழுவும் நூல் அது. ஏழாம் நூற்ருண்டில், நரசிம்மவர்ம பல்லவனது அவையிலிருந்த புலவரான தண்டி என்பார் இயற்றிய காவியதர்சம் என்னும் வடமொழி நூலே ஒட்டி, 2-ஆம் குலோத்துங்கன் காலத்தில் தோன்றியதே தண்டி அலங்காரம். இந்த அணி இலக்கண நூலில் சூத்திரங்களுக்கு உதாரணங்களாகக் காட்டப்படும் பல செய்யுட்கள் நய மிக்கவை. குணவீரபண்டிதர் என்னும் சமணர் எழுத்தும் சொல்லும் பற்றி நேமிநாதம் என்ற இலக்கண நூலே இயற்றினர். அவரே ஆக்கிய இன்னெரு நூல் வெண்பாப் பாட்டியல் என்பது. மூன்ரும் குலோத்துங்கன் காலத்தவரான பவணந்தி என்னும் சமணத்துறவியார் இயற்றிய நன்னூல், எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் என்னும் இரண்டு அதிகாரங்களே உடையது. சொற்செட்டும் எளிய நடையும் இவ்விலக்கணத்தின் சிறப்பியல்புகளாம். எனவே தமிழ் கற்பவர் முதலில் பயில்வது நன்னூலே. ஐயனரிதனர் என்ற சமணர் ஆக்கியது புறப்பொருள் வெண்பாமாலே. சில அம்சங்களில் தொல்காப்பியத்திலிருந்து வேறுபடும் இந்நூல், பன்னிருபடலம் என்ற பழைய நூலே ஒட்டி அமைந்தது என்பர். பன்னிரு படலமோ இப்போது கிடைக்கவில்லே. எட்டாம் நூற்ருண்டில் எழுந்த திவாகரம் என்ற நிகண்டுக்குப் பின்னர் பதினேராம் நூற்ருண்டில் பிறந்த நிகண்டு பிங்கலம் ஆகும்.

## கம்பன் கண்ட கலைக்கோயில்

"மண்ணினை அளக்க நீண்ட மாலென" வளர்ந்து தமிழிலக்கிய அரங்கில் தனக்குவமையில்லாதவனாகத் திகழும் கம்பன் தோன்றியதும் இக்காலமே. அவன் பொற்காலத்தின் முன்னறிவிப்பாக ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தானென்றும் கி.பி. 885ல் இராமாயணம் அரங்கேறியது என்றும் சிலர் நிறுவுவர். பத்தாம் நூற்றாண்டில், இராஜராஜன் தலைமையில் சோழர் பேரரசு வலிவும் பொலிவும் பெறவிருந்த சூழலே கம்பனைப் படைத்தது என்பதற்குச் சான்று காட்டுவோர் சிலர். சோழர் சாம்ராஜ்யத்தின் தேய்பிறைப் பருவத்தில்—12ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில்–கம்பன் காவியம் எழுந்ததென்று பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை முதலானோர் நிலைநாட்டுவர். கம்பனது காலத்தைப் பற்றிக் கருத்து வேற்றுமை இருப்பினும், அவனை உலக மகா கவியாகக் கணிப்பதில் அனைவரும் உடன்படுவர்.

சோழநாட்டுத் திருவழுந்தூரில், கைம்மணி யடித்துக் காளிக்குப் பூசை செய்யும் உவச்சர் குலத்தில் தோன்றிய கம்பன், அற்றாரை ஆதரித்த அருளாளராக வெண்ணெய்நல்லூரில் வாழ்ந்த சடையப்ப வள்ளலின் ஆதரவைப் பெற்றான். அவனது சமயம் வைணவம் என்பர். எனினும் சமரச நோக்கால் சிறந்தவன் கம்பன். "அரன் அதிகன், உலகளந்த அரி அதிகன் என்றுரைக்கும் அறிவிலோரைச்" சாடுகிறான். திரி மூர்த்திகளும் ஒன்றாய்ச் சேர்ந்து இராமனாக அவதரித்தனர் என்றே அனுமன் வாயிலாகக் கூறுவான்:—

**மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத் தாய**
**காலமும் கணக்கும் நீத்த காரணன், கைவில் ஏந்திச்**
**சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து, தொல்லை**
**ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும்விட்டு**
**அயோத்தி வந்தான்.**

'என்றுமுள தமிழ்' என்று தாய் மொழியைப் போற்றும் கம்பன், தண்டமிழ் வழங்கும் பாண்டி நாட்டிற்கு அண்டர் நாடும் இணையாகாது என்பான். சீதையின்அழகைச் 'செஞ்சொற் கவி இன்பம்' ஆகக் காணுகின்றான்.

மொழிப் புலமை, யாப்பமைப்புத் திறன், நடை எளிமை, சிந்தனை வளம், நாடக நயம், நகைச்சுவை, பாத்திரப் படைப்பாற்றல், கடந்த காலம் பற்றிய அறிவு, வருங்காலத்தைத் தெளிவாக உணரும் "நெடிது நோக்கும் நோன்மை," வாழ்வின் அடிப்படைகளைப் பற்றிய ஞானம் ஆகியவற்றில் கம்பனுக்கு ஒப்பான கவிஞர் இலர் என்போம். அவனது கலைக் கருவூலமான இராமாயணம் உலகப் பெருங் காப்பியங்களுடன் ஒப்பிடத் தக்கது.

உழவும் தொழிலும் உள்நாட்டு வெளிநாட்டு வாணிகமும் பல்கிப் பெருகும் சூழலில் வளர்ந்தான் கம்பன். அவனியில் வாழ்வோரையெல்லாம் தழுவும் அருள் நோக்கில் இப்பொருட் செல்வம் பயன்பட்டால், இன்மையும் புன்மையும் பழங்கால நினைவாகுமென்பதை ஓர்ந்தான் அவன். இத்திருநோக்கில் பண்பட்ட அவனது உள்ளத்தில் புதிய கனவு பிறந்தது. அதுவே, வெண்சுடர் நிலை எய்திய அவனது மனோபாவனையில், இராமனை ஈன்றெடுத்த கோசலமாக உருவெடுத்தது. அக்கோசலம் அமைவதற்குத் தடையாக அதிகார ஆணவமும் செல்வச் செருக்கும் சமயத் தருக்கும் சாதிப் பித்தும் நிற்பதைக் கண்ட கவிஞனது மனம் மறுகியது. பொருட் செல்வப் பெருக்கோடு இத் தீய இயல்புகளும் வளர்வதை அவன் கண்டான். புல்லர்கள் கையில் பொருள் குவிந்தால் மாந்தருக்கு இன்னலே நேருமென்பதைத் தேர்ந்து தெளிந்த கவிஞன், அந்த ஆபத்தை இராவணேசுவரனது பாவப் பண்டாரமான இலங்கை வாயிலாகப் புலப்படுத்தினன். இரக்கமென்ற பொருளுக்கு இடமில்லாத இவ்

வரக்க அரசியலின் அழிவைக் குறிப்பது இராவண வதம். ''அறம் வெல்லும், பாவம் தோற்கும்'' என்பது கம்பன் காவியத்தின் பாவிகம்.

கம்பன் கண்ட கோசலம் அவனது அன்பின் திறத்துக்கும் அறிவின் உரத்துக்கும் கற்பனை வளத்துக்கும் சிறந்த எடுத்துக்காட்டு. ''எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும்'' பெற்றுப் பொலிவதால் ''இல்லாரும் இல்லை. உடையார்களும் இல்லை''. மேலும், கள்வரும் காவலரும், கொள்வாரும் கொடுப்பாரும் இல்லாது போயினர். மக்கட் பண்பு மாநிலமெங்கும் தண்ணொளி வீசி மண்ணை விண்ணாக்கிய அந்த இலட்சிய உலகில், நல்லறச் செல்வர்களே நிறைந்திருந்ததால், வன்முறைக் கருவிகட்கும் புன்னெறிச் சூழ்ச்சிகட்கும் இடமில்லாது போனது. மக்களை அடக்கி ஆள்வதாக இல்லாது, அவர்களது அறநெறிச் செயல்களை முறைப்படுத்தும் அமைப்பாகவே அரசு அமைந்தது. எனவேதான், ''மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்'' என்ற வழிவழி வாய்பாட்டை மாற்றி, ''உயிர் எலாம் உறைவதோர் உடம்பும் ஆயினன்'' என்று அரசனுக்கு இலக்கணம் கூறுவான் கம்பன். தயரதனது படையும் அரணும் ஒப்புக்கே இருந்தன என்றும் அவன் ஒற்றுடைக் கற்றிராதவன் என்றும் கவிஞன் மொழிவான். இவ்வாறு, இலட்சியப் பொதுவுடைமைச் சமுதாயச் சித்திரத்தை அருமையாக வரைகிறான் கம்பன்.

இத்தகைய கோசலத்தில் பிறந்த தலைவன் இராமன். ''அறம் வளர்க்கும் கண்ணாளன்'' ஆன காகுத்தன், ''யாதும் ஊரே, யாவரும் கேளிர்'' என்ற நெறியினைத் தழுவி வாழ்கிறான். காடுவாழ் குகனையும் வனநரன் எனத்தக்க வானரனும் சுக்கிரீவனையும், மனைவியைக் கவர்ந்த மாற்றான் தம்பியான வீடணனையும் தம்பியராகத் தழுவும் மனவிரிவு இராமனுடையது. தேவரையும் மூவரையும் அஞ்சி வாழச்செய்த இராவணேசுவரனை

எதிர்த்து நின்று வெற்றிகொள்ளும் கற்பின் கனலியாகச் சிறை இருந்த செல்வியான சீதை வளர்கிருள். மனித இயல்பின் நுட்பங்களையெல்லாம் கற்றுத் தேர்ந்த கவிச் சக்கரவர்த்தி, பல பாத்திரங்களை உயிர்த்தளிர்ப்போடு படைத்துவிடுகிருன். பாத்திரப் படைப்பு மர்மத்தை உணர்ந்து அக்கலையில் அரிய வெற்றிகண்ட இவனுக்கு, உலக இலக்கியத்திலேயே ஷேக்ஸ்பியரை மட்டுமே நிகராகக் கூறமுடியும்.

வான்மீகி பகவான் இயற்றிய ஆதிகாவியத்துக்குக் கம்பன் பெரிதும் கடன்பட்டிருக்கிருனென்பது மெய்யே. ஆனுல் கம்பன் கதைப் போக்கையும் பாத்திரங்களையும் புதுக்கிவிடுகிருன். முதனூல் காட்சிகள் கம்பனது புலமை எனும் உலையில் உருகி அவனது மனேபாவனை யில் புத்துருப் பெறுகின்றன. ஒவ்வொரு நிலைமையின் உயிர்த்துடிப்பும் சிறப்பாக வெளிப்படுவதாலும், பாத்தி ரப் படைப்பு மகத்தான வெற்றி பெற்றிருப்பதாலும், கம்பனது காப்பியத்தை நாடகக் காப்பியம் என்போம்.

கம்பனது காப்பிய—அமைப்புத் திறன் பெரிது. உறுப்பழகும் ஒருமை நயமும் நிறைவாகப் பெற்றுப் பொலியும் இராமாவதாரத்தில் முதல், இடை, கடை என்ற மூன்று பகுதிகளும் முறையே இயல்பாக வளர்ந்து ஒன்றியுள்ளன.

விவரம் அறியாதவரும் வீண்வம்பு தொடுப்போருமே, கம்பன் தானடித்த மூப்பாக வடசொற்களை 'இறக்குமதி' செய்துவிட்டானென்று குற்றம் சாட்டுவர். தொல்காப் பியரின் சொல்லதிகார இலக்கண நெறியிலும் நாயன்மார் களது இலக்கிய வழியிலும் வேரூன்றி நின்ற கம்பன், வடமொழி உறவால் தமிழ் பெறக்கூடிய நலங்களைப் பயன்படுத்திஞன். அதனுல் தமிழின் தன்னியல்பு செழித் ததே யல்லாது இழிவடையவில்லை. அழகும் ஆற்றலும் மிகுந்த கவிதைகளில் மாபெருங் காப்பியத்தைப் படைப்

பதற்குரிய கருவியாகத் தமிழைச் செம்மை செய்த சிறப்பு கம்பனுடையது.

சொல்லின் செல்வனுன கம்பனது காப்பியம் எளிய நடையில் அமைந்தது. எனவே கற்றவர் படிப்பதுடன் கல்லாதவர் கேட்டு இன்புறத்தக்க இலக்கியக் காப்பிய மாக அது உள்ளது.

விருத்தப்பாவினத்தின் எண்ணற்ற வகைகளைப் படைத்து ஆண்ட பெருமை கம்பனுடையது. "விருத்த மெனும் ஒண்பாவில் உயர்கம்பன்" என்பது பழைய கவிவாக்கு.

பாரதப் பண்பாட்டின் வைப்பு நிதியாகப் பன்னெடுங் காலமாக வளர்ந்து வந்தது இராம சரிதம். ஒரு குறிப் பிட்ட கட்டத்தில் அதனைப் பேரிதிகாசமாக இயற்றி அருளினுர் வான்மீகி முனிவர். இதன் பின்பும் கதையின் அம்சங்கள் வளர்ந்தன. மாந்தரில் சிறந்தவனுக வான்மீகத்தில் காட்சிதரும் காகுத்தன், திருமாலின் அவ தாரமென்றே சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்பெறுகிருன். ஆழ்வார்களும் அவனை அவ்வாறே கொண்டாடினர். எனவே, நாயன்மார்களும் ஆழ்வார்களும் ஆற்றிய தொண்டால் தமிழ் மக்களின் உள்ளத்தைக் கொண்டதும் படைப்பாற்றல் மிக்கதுமான பக்தி இயக்கத்தின் சூழலில் பிறந்த கம்பன், இராமனைப் பரம்பொருளின் அவதார மாகவே போற்றுவதில் வியப்பில்லை, அந்த அவதாரமே "மானுடத்தின் வெற்றி" என்று சித்திரித்து மானுட குலத்தின் மேன்மையினைப் புலப்படுத்துவது கம்பனது சிறப்பு. எனவேதான், "கம்பன் என்றொரு மானுடன் பிறந்ததும்" என்றுரைத்துக் கம்பனது ஒப்பற்ற மனிதத் தன்மையினை, மனிதகுலத்திடம் கம்பனுக்கிருந்த எல்லை யற்ற நம்பிக்கையை, அன்பும், அறிவும், ஆற்றலும், அற மும் ஒரு சேரப் பொருந்தப் பெற்று, மனிதகுலம் பொற் காலத்தினைக் காணவேண்டுமென்ற கம்பனது இதயத் துடிப்பினை, பாரதி உணர்த்துவான்.

# 6. பிற்காலம்

## (1200—1800)

பதின்மூன்றும் நூற்றுண்டில் சோழர் பேரரசு சீர் குலேந்து சிதறியது; பாண்டியர் குடைநிழலில் தமிழகம் ஒற்றுமை கண்டது. ஆனுல் பதினுன்காம் நூற்றுண்டின் தொடக்கத்தில், தில்லி சுல்தானின் படைத் தலேவனை மாலிக் காபூர் தமிழகத்தின்மீது படையெடுத்தான்; அதனேத் தொடர்ந்து மதுரையில் முகம்மதியர் ஆட்சி நடைபெற்றது. ஆனுல் விரைவிலேயே வழிவழிவந்த இந்தியப் பண்பாட்டைப் பாதுகாக்கவேண்டுமென்ற உணர்ச்சிப் பெருக்கில் உருவான விஜயநகரப் பேரரசின் பகுதியாகத் தமிழகம் அமைந்தது. பதினுரும் நூற்றுண்டில், கிருஷ்ணதேவராயர் ஆட்சி முடிவுற்றபோது, மதுரையில் நாயக்கர் ஆட்சி ஆரம்பமானது. பின்னர் தஞ்சை, செஞ்சி முதலிய இடங்களிலும் நாயக்கர் ஆட்சிகள் அமைந்தன. பதினேழாம் பதினெட்டாம் நூற்றுண்டுகளில் நிலவிய அரசியல் குழப்பத்தைத் தொடர்ந்து பத்தொன்பதாம் நூற்றுண்டில் ஆங்கிலேயர் ஆட்சி அமைந்தது.

இந்தக் காலத்தில் படைப்பாற்றலின் பொலிவு பெற்ற பேரிலக்கியங்கள் தோன்றவில்லே; தத்துவ விளக்கங்களும் பழைய நூல்களது உரைகளும் இக்

காலத்தே எழுந்தன. பல புராணங்களும் பிரபந்தங்களும் பிறந்தன. இலக்கியத் திறனுய்வாளன் போற்றத்தக்க புதிய நூல்கள் சிலவே தோன்றின.

## உரையாசிரியர்கள்

உரை நூல்களைக் குறிப்பிடும்போது முதலில் 8-ஆம் நூற்றுண்டிலெழுந்த இறையனுர் களவியல் (அகப்பொருள்) உரையினைச் சொல்லவேண்டும். அக்கால உரைநடைக்குச் சிறந்த சான்றுக அது விளங்குகிறது. அடுத்துக் குறிப்பிடத்தக்கது, இளம்பூரணர் இனிய எளிய நடையில் தொல்காப்பியத்துக்கு வழங்கிய உரையாம். இப்போது இவர் உரையொன்றே தொல்காப்பியம் முழுமைக்கும் கிடைக்கும் பழைய உரையாகும். இவர் சமணர் என்பதும் துறவி என்பதும் அறிஞர் ஊகித்து உரைக்கும் செய்திகள். பவணந்தி முனிவரது நன்னூல் இளம்பூரணர் உரையைத் தழுவிச் செல்வதால், மூன்றும் குலோத்துங்கன் காலத்துக்கு முன்னரே இவர் வாழ்ந்தாரென்பது தெளிவு.

பதின்மூன்றும் நூற்றுண்டில் வாழ்ந்த சேனவரையர், தொல்காப்பியச் சொல்லதிகாரத்துக்கு உரை எழுதிய ஐவருள் சிறந்த உரையாசிரியர் ஆவார். அவர் எழுதிய வேறு நூலோ உரையோ கிடைக்கவில்லை. இவர் இளம்பூரணர் உரையைப் பலவிடத்தில் மறுத்திருக்கிருர். பொருளைத் தெளிவாக விளக்குவது இவரது உரையின் சிறப்பு. ஆனுல் நடை உயர்நிலைக்குரியதே. ஆசிரியர் பலருள்ளும் சிறந்து விளங்கியதால், பேராசிரியர் என்று வழங்கப்பெற்று நாளாவட்டத்தில் இயற்பெயரை இழந்தவரான பேராசிரியர் தொல்காப்பியத்துப் பொருளதிகாரம் முழுமைக்கும் உரை எழுதினுரென்று ஊகிக்க இடமுண்டு. ஆனுல் அவ்வதிகாரத்தில் நான்கு இயல்களுக்கு அவர் எழுதிய உரையே அச்சாகியுள்ளது; தடை எழுப்பி விடை காணும் முரண்நிலைத் தர்க்க வழியில் (dialectics)

கருத்தை விளக்குவது இவரது உரையில் சிறப்பு. இவர் குறுந்தொகைக்கு எழுதிய உரை இப்போது கிடைக்க வில்லை.

பதின்மூன்றும் நூற்றுண்டில் வாழ்ந்த பரிமேலழகர் திருக்குறளுக்கும் பரிபாடலுக்கும் உரை கண்ட பெரு மகனுர் ஆவார். குறளுக்கு உரை கண்ட பதின்மருள் பரிமேலழகரே இறுதியில் உரை எழுதியவர்; அவரது உரையே மிகச் சிறந்தது என்பது பெரியோர் கருத்து. இதனை,

> பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ ? பாரிலுள்ள
> நூலெல்லாம் வள்ளுவர் செய் நூலாமோ—நூலில்
> பரித்தஉரை எல்லாம் பரிமே லழகன்
> தெரித்தஉரை யாமோ தெளி

என்ற பழைய பாடலால் உணரலாம். தர்க்கரீதியாகச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்ற தன்மை இவரது உரையின் தனிச் சிறப்பாம். திட்பநுட்பச் செறிவுக்கு உதாரணமாக விளங்குவதும் அதன் பெருமையே. எனவே தமிழில் காணப்படும் உரைகட்கெல்லாம் தலை வரம்பாயது என்று சான்றேர் போற்றுகின்றனர். இவர் வைணவரே ஆயினும் பிறமத நூல்களை நன்கு ஆராய்ந்து அவற்றின் முடிவுகளைத் தம் உரையில் ஆண்டுள்ளார்.

'உச்சிமேல் புலவர் கொள் நச்சினர்க்கினியர்' என்ற புகழுரைக்கு உரிய நச்சினர்க்கினியர் தொல்காப்பியம், பத்துப்பாட்டு, கலித்தொகை, சீவகசிந்தாமணி ஆகியவற்றுக்கு உரை எழுதியுள்ளார். சைவரான நச்சினர்க்கினியர், சமண நூலான சீவக சிந்தாமணிக்கு உரை எழுதியிருப்பதும், அச்சமயக் கொள்கைகளை அம்மதத்தினர் போலவே விளக்கி யிருப்பதும், அவரது மனவிரிவைப் புலப்படுத்தும். தொல்காப்பியம் முழுமைக்கும் இவர் உரை எழுதினர்; ஆனல் பொருளதிகாரத்தின் பிற்பகுதியான மூன்று இயல்களுக்கு இவரது உரை இப்போது கிடைக்கவில்லை.

இவரது உரை நடை தெளிவானது, இனியது. சொல் நயம் விளக்குவதில் இவர் சிறந்தவர். பத்துப்பாட்டுக்கு இவர் உரை கண்டதை அசுர சாதனை என்போம். இவரது உரையில்லாமல் பத்துப் பாட்டைப் புரிந்து கொள்வது அரிதாகும்.

சிலப்பதிகாரத்துக்கு உரை கண்டவர் அடியார்க்கு நல்லார். இவருக்கு முத்தமிழிலும் சிறந்த பயிற்சி இருந்ததை இவர்தம் உரையிலிருந்து அறிகிறோம். மறைந்து போன பல இசைத் தமிழ், நாடகத் தமிழ் நூல்களின் பெயர்களை இவரது உரையிலிருந்து அறிந்து கொள்கிறோம். இவர் 56 நூல்களிலிருந்து மேற்கோள் காட்டியுள்ளாரென்பது குறிப்பிடத்தக்கது.

புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு ஆகிய சங்க நூல்களின் உரைகளும் ஏறத்தாழ இதே காலத்தில் எழுந்தன. அந்த உரைகளை இயற்றியவர்கள் இன்னார் என்பது புலப்படவில்லை. மயிலைநாதர் எழுதிய நன்னூல் உரையும் பெருந்தேவனார் வீரசோழியத்துக்கு எழுதிய உரையும் இக்காலத்தனவே.

## சைவ நூல்கள்

இனிச் சைவ நூல்களை நோக்குவோம். 13-ஆம் நூற்றாண்டில எழுந்த சிவஞானபோதம், சைவ சித்தாந்த அடிப்படைகளைப் பன்னிரண்டு திட்பநுட்ப சூத்திரங் களில் வகைந்து கூறுவதாகும். இதனை ஆக்கிய மெய் கண்டதேவர், சூத்திரங்களுக்கு வார்த்திகப் பொழிப்புரை யும் எடுத்துக் காட்டுச் செய்யுட்களும் அருளியிருக்கிறார். பதி (இறைவன்), பசு (ஆத்மா), பாசம் (தளை) என்ற முப்பொருள் உண்மையினையும், அவற்றின் இலக்கணத் தையும், தளையிலிருந்து விடுபடும் வழியினையும், முக்தி யின் தன்மையினையும் எடுத்துரைக்கும் சிவஞானபோதம், சைவ சித்தாந்த நூல்கள் பதினான்கில் தலைமையான ஞான நூலாகும்.

மெய்கண்டாரின் முதல் மாணுக்கராகிய அருள்நந்தி சிவாசாரியர் விருத்தப்பாவில் இயற்றிய சித்தாந்த நூலே சிவஞான சித்தியார் என்பது. இதில் பரபக்கம் என்னும் பிரிவு, பதினுன்கு பரசமயங்களின் கொள்கைகளை மறுத்துரைக்கிறது; சுபக்கம் என்னும் பிரிவு, சிவஞான போதத்தின் சூத்திரங்களைப் பின்பற்றிச் சைவ நெறியை விரித்துரைக்கிறது. "சிவத்தின்மேல் தெய்வமில்லை; சிவஞான சித்திக்கு மேல் சாத்திரமில்லை" என்பது சைவ உலகத் திருவாக்கு. உமாபதி சிவனுர் இயற்றிய எட்டு சித்தாத்தந்த நூல்களில் சிவப்பிரகாசம் குறிப்பிடத்தக்க தாகும்.

பதினைந்தாம் நூற்றுண்டில் வாழ்ந்த தத்துவராயரும் அவரது அம்மானும் குருவுமான சொருபானந்தரும் வேதாந்தம் உணர்ந்த பெரியார்களாவர். தத்துவராய சுவாமிகள் எளிய சொற்களால் அமைந்த பக்திப் பாடல் களைப் பாடியவர். களம் புகுந்து விந்தை நிகழ்த்தி வெற்றிகண்ட வீரனைப்பாடும் பிரபந்த வகையான பரணி என்பதைச் சமயப் பொருள் பாடுவதற்கு முதன் முதலில் பயன்படுத்திய பெரியார் இவரே. மோகவதைப் பரணி, அஞ்ஞவதைப் பரணி என்பன இவரது பரணி நூல்களாம்.

முருகனை வழிபட்டுத் திருப்புகழ்ப் பாடல்களைப் பாடிய அருணகிரிநாதர் இந்நூற்றுண்டில் வாழ்ந்த பெருந்தகையாராவார். முருகன் தலங்கள் அனைத்துக்கும் சென்று தரிசனம் செய்து பாமாலை சூட்டிய ஆசிரியர், தத்துவத்தில் சைவ சித்தாந்தத்தைத் தழுவி நின்றுர். மிகுதியான வடசொற்கலப்பாலும் தனிப்பொலிவு பெற் றுள்ள திருப்புகழ், விதவிதமான சந்தங்களால் அமைந்த இன்னிசைப் பாடல்களின் தொகுப்பாகும். அவை கரு நாடக சங்கீத நுணுக்கங்கள் பலவற்றுக்கு ஏற்ற இலக் கியங்களாகத் திகழ்கின்றன.

பதினுரும் நூற்றுண்டில் பிறந்த முக்கியமான சமய நூல்களாவன: கிருஷ்ணதேவராயர் அவையினை அணி

செய்த அரிதாசர் ஆக்கிய இருசமய விளக்கம், சிதம்பரம் மறைஞான சம்பந்தர், ஆகமங்களின் அடிப்படையில் அமைத்த சிவதருமோத்தரம்; சிவாக்கிரகயோகிகளது பல சைவ நூல்கள்; நிரம்ப அழகிய தேசிகரின் சொற் சுவை மிக்க சேதுபுராணம்; திருவாவடுதுறை மடத் தலைவரான அம்பலவாண தேசிகர் இயற்றிய சித்தாந்த சிகாமணி முதலியன.

பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த சைவப்புலவர் களில் குமரகுருபரரும் சிவப்பிரகாசரும் குறிப்பிடத் தக்கவர்கள். கந்தர் கலிவெண்பா, மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், மதுரைக் கலம்பகம், நீதிநெறி விளக்கம் முதலியன குமரகுருபரர் படைத்தவை. பெருமித நடை யும் ஓசை நயமும் இவர் தம் செய்யுட்களின் சிறப்பாம். உயர்வு நவிற்சி, இல்பொருள் உவமை முதலான அணி களை மிடுக்கோடு ஆள்வார். வடபுலத்தில் பல்லாண்டு வாழ்ந்தார்; இந்தியைக் கற்றுத் தேர்ந்து சைவ சமயத் தைப் பரப்பினர். வீரசைவராக விளங்கிய சிவப்பிரகாச சுவாமிகள் ஆக்கிய சித்தாந்த சிகாமணியும் பிரபுங்கலீலை யும் வீரசைவச் சார்பானவை. இவர்தம் நால்வர் நான் மணிமாலை, சைவ சமயாசாரியர்களைப் புகழ்வதாகும். சிறு வர்க்கு அறம் உரைக்கும் நன்னெறியும் இவர் இயற்றி யதே.

பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் தாயுமானவர் ஆவார். இவரது பாடல்கள் சைவசித்தாந்த நுட்பங்களை விளக்குவதோடு பக்திச் சுவை நிறைந்தவையாக உள்ளன. ஆன்மாவைக் காதலி யாகவும் ஆண்டவனைக் காதலனாகவும் வருணித்து, இறை வனுடன் ஐக்கியமாகி ஆன்மா அடையும் பேரின்பத் தைப் புலப்படுத்தும் ஆனந்தக் களிப்பு இவரது சமயக் கொள்கையின் பெட்டகமாகும். எல்லாச் சமயங்களை யும் ஒன்றுபோல் பாவிக்கும் தகைமையும், வேதாந்தத் தையும் சித்தாந்தத்தையும் சமரசப்படுத்தும் உயர்வும்

இவர் தம் தனிச் சிறப்புக்களாம். மிகுதியாக வட சொற்கலந்தே இவர் பாடுவார். இவரது பாடல்களில் இனிமையும் உணர்ச்சியும் ததும்பி நிற்கின்றன.

## வைணவ நூல்கள்

வைணவ இலக்கியத்தில் வடமொழியும் தமிழும் கலந்த மணிப்பிரவாள நடைக்குச் செல்வாக்கு ஏற்பட்டது. திருவாய் மொழிக்குப் பிள்ளான் என்பவர் எழுதிய விரிவுரையும், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, வடக்கு திருவீதிப்பிள்ளை முதலியோர் எழுதிய திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்களும் மணிப்பிரவாள நடையில் அமைந்தனவே. வடநூற்பயிற்சியும் சமயக் கல்வியும் பெற்ற சிலருக்கே அவற்றை எளிதில் புரியமுடியும். திருவரங்கத்து அமுதனர் ஆக்கிய இராமானுச நூற்றந்தாதி மட்டும் எளிய நடையில் அமைந்த பக்தி இலக்கியமாகும். குருவின் அருளின்றி கடைத்தேற முடியாது என்ற கருத்தினை மையமாகக் கொண்ட இது, இன்றும் வைணவ பக்தர்களது தினசரிப் பிரார்த்தனைக்குப் பயன் படுகிறது.

பிள்ளை லோகாசாரியர், "அஷ்டாதச ரகசியங்கள்" என்ற பதினெட்டு நூல்களையும் மணிப்பிரவாளத்திலேயே ஆக்கினர். இவரது தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனர் திருப்பாவை முதலியவற்றுக்கு வியாக்கியானம் செய்ததோடு ஆசார்யஹ்ருதயம் என்ற நூலையும் படைத்தார்; நம்மாழ்வாரது திருவாய் மொழியினைப் பற்றி விளக்கம் தருவது அந்நூலின் தனிச் சிறப்பென்பர். பிள்ளை லோகாசாரியரின் மாணுக்கரான திருவாய்மொழிப் பிள்ளையும் அவர் தம் சீடரான மணவாள மாமுனிகளும் வியாக்கியான கர்த்தாக்களாவர். மணவாள மாமுனிகளைத் தென்கலை வைணவர்கள் சிறப்பாகக் கொண்டாடுவர். வடகலைத் தலைவரான வேதாந்த தேசிகர், வடமொழியில் பல நூல்களை இயற்றியதோடு,

மும்மணிக்கோவை, நவரத்தின மாலை, அடைக்கலப் பத்து முதலிய தமிழ் நூல்களையும் இயற்றினர்.

வைணவ சமய கவிஞர்களில் குறிப்பிடத்தக்கவர் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் ஆவார். "அரங்கனைப் பாடிய வாயால் குரங்கனை (ஏழுமலையானை)ப் பாடேன்" என்றுரென்றும் பின்னர் அப்பேத புத்தி நீங்கப் பெற்று ரென்றும் கூறுவர். இவரது எட்டு நூல்களும் சேர்ந்து 'அஷ்டப் பிரபந்தம்' என்றும் 'ஐயங்கார் பிரபந்தம்' என்றும் குறிப்பிடப்பெறும். இவரைத் திவ்விய கவி என்பர். யமகம், திரிபு, சிலேடை முதலிய சொல்லணிகள் நிரம்பப் பாடுவதில் வல்லவரான இவர், எளிய சொற்களைக் கொண்டு எளிதில் பொருள் விளங்குமாறு பாடியிருக்கிறார்.

## புராணங்கள்

புராணங்களில் பதினாறும் நூற்றாண்டில் எழுந்த அரிச்சந்திர புராணம் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும். நல்லூர் வீரகவிராயர் பாடிய இந்நூல் 1,225 இனிய விருத்தங்களை உடையது. திருவிளையாடற் புராணங்களில் சிறந்தது பரஞ்சோதி முனிவர் பாடியதே ஆகும். வடநூலினைத் தழுவி கச்சியப்பர் சிவாச்சாரியார் கந்தபுராணத்தின் ஆறு காண்டங்களைப் பாடினர்; அவரது மாணாக்கர் ஒருவர் ஏழாவது காண்டத்தை இயற்றினர். கம்பன் கவிதையை முன் மாதிரியாகக் கொண்டு கச்சியப்பர் எழுதிய இந்நூலில் பல இனிய செய்யுட்கள் உள்ளன. தமிழில் வழங்கும் இரண்டு பாகவத மொழிபெயர்ப்புக்களும் பதினாறும் நூற்றாண்டில் தோன்றியவையே.

## லௌகிக இலக்கியம்

இனி உலக இயல் நூல்களை நோக்குவோம். பதின் மூன்றாம் நூற்றாண்டில் எழுந்தது தஞ்சைவாணன் கோவை. வாணனைத் தலைவனாகக் கொண்ட இதனை ஆக்கி

யவர் பொய்யா மொழி என்பவர். திருக்கோவையைப் போலவே தஞ்சைவாணன் கோவையிலும் சிறப்பாகச் சொல்வதற்கு ஒன்றுமில்லை.

“வெண்பாவிற் புகழேந்தி” என்ற பாராட்டுக்குரிய புலவர் இயற்றிய நளவெண்பா, அவலச்சுவை நிறைந்த நளன் கதையை உள்ளத்தை உருக்கும் வகையில் பாடுகிறது. எல்லாரும் எளிதில் படிக்கக் கூடிய இனிய வெண்பா யாப்பில் அமைந்த இந்நூலைத் தவிர, புகழேந்தி ஆக்கிய பிறநூல் எதுவும் கிடைக்கவில்லை. அல்லியரசாணிமாலை முதலிய நூல்களைப் “பாட்டால் உயர்ந்த புகழேந்தி” யின் தலையில் சுமத்துவது கொடுமையே ஆகும்.

விரிந்த நூலாக உள்ள வியாச பாரதத்தின் கதை சங்ககாலம் முதற்கொண்டே தமிழ் மக்கள் உள்ளத்தைக் கொள்ளைக் கொண்டதாகும். சங்க காலத்திலேயே பாரதம் தமிழ் வடிவு பெற்றதும் பல்லவன் நந்திவர்மன் காலத்தில் பாரதவெண்பா பிறந்ததும் நாம் அறிந்த சேதிகளே. பதினைன்காம் நூற்றாண்டுக்குரிய வைணவப் புலவரான வில்லிபுத்தூராழ்வார், பாரதக் கதையை எவரும் எளிதில் உணருமாறு சுருக்கமாகச் செந்தமிழில் சந்த விருத்தத்தில் பாடினார். இன்றியமையாக் கதைப் பகுதிகளைத் தொடர்புபடுத்தி, சுமார் நாலாயிரம் பாடல்களில் பாரதக் கதையைப் பாடுகிறார் வில்லி. அணிமைக் காலம் வரையில், கம்பராமாயணத்துக்கு அடுத்த நிலையில் வில்லி பாரதப் பயிற்சி பரவியிருந்தது. பலவகைப் பட்ட சந்தங்களும் சொற்சுவை பொருட்சுவையும் அமைந்த வில்லி பாடல்களைக் கற்றோர் படித்தும் கல்லாதவர் கேட்டும் இன்புற்றனர். இதன் சந்த இன்பத்துக்குச் சிறப்பான காரணம் மிகுதியான வடசொற்கலப்பாகும்.

இணைபிரியாத் துணைவராய் வாழ்ந்ததால் இரட்டையர் என்றே பெயர் பெற்ற இரு புலவர்களும் வில்லியின்

காலத்தவரே. அவர்கள் இளஞ்சூரியர், முதுசூரியர் என்ற பெயர்களால் வழங்கப் பட்டனரென்றும், ஒருவர் குருடராகவும் மற்றொருவர் முடவராகவும் இருந்தன ரென்றும் கூறுவர். மதியாத செல்வர்களை வெறுக்கும் மானஉணர்ச்சியும், உயர்ந்தோரைப் போற்றும் நற்பண் பும் பெற்றவர்கள். சொல்லணி பொருளணிகளோடு, நகைச்சுவையும் எள்ளந் சுவையும் அமையப் பாட வல்லவர்கள். 'கலம்பகத்திற்கு இரட்டையர்கள்' என்பர். தில்லைக் கலம்பகமும் திருவாமாத்தூர்க் கலம்பகமும் இவர்கள் ஆக்கியவையே. அவையும் காஞ்சியில் கோயில் கொண்டுள்ள ஏகாம்பரநாதனைப் பற்றிய ஏகாம் பரநாதர் உலாவும் இரட்டையரது சிவபக்திக்குச் சிறந்த சான்றாக உள்ளன.

கார்மேகம் பொழிவதுபோல் ஆசுகவிகளையும் சிலேடைக் கவிகளையும் எளிதாகப் பாடியதால் காள மேகம் என்று பெயர் பெற்ற புலவர் (இவரது இயற் பெயர் வரதன்) பதினைந்தாம் நூற்றாண்டில் தோன்றினார். போலிப் புலவர்களையும் பிறருக்கு உதவாத சுயநலச் செல்வர்களையும் பழித்துப் பாடியதால் "வசை பாடக் காளமேகம்" என்ற சொற்றொடர் இவரைப்பற்றி அமைந்தது. இவர் பாடிய தனிப்பாடல்கள் பல. திரு வானைக்கா உலா என்பது இவர் பாடிய நூல்.

பதினாறும் நூற்றாண்டில் தோன்றிய எல்லப்ப நயினார், சங்கரர் இயற்றிய சௌந்திரிய லஹரியின் தமிழாக்கத்துக்கு (வீரை கவிராச பண்டிதர் விருதப்பாவில் செய்த மொழி பெயர்ப்பு) உரை எழுதினார். திருவாரூர்க் கோவையும் இவர் எழுதியதே.

அதிவீரராம பாண்டியன் (16 ஆம் நூற்றாண்டு) ஆக்கிய நைடதம் நளன்கதையை நவில்வது. பண்டித நடை யில் அமைந்த இந்நூலின் சில புணர்ந்துரைகள் விரும்பத் தக்கனவாயில்லை. ஆனால் சிந்தாமணி, கம்பன் காவியம் முதலிய பெருநூல்களின் உவமைகளும் கருத்துக்களும்

சுவைகளும் இதில் அமைந்துள்ளன. "நைடதம் புலவர்க்கு ஔடதம்" என்றே கூறுவர். எடுப்பாகத் தொடங்கிப் போகப் போகத் தேய்வதால், நூலாயும் நுண்ணறிவு பெற்ற இவரது அண்ணி, "நாய் விரைந்தோடி இளைத்தாற் போன்ற தன்மையுடைத்து" என்றுராம். கூர்மபுராணம், காசிக் காண்டம் ஆகியவற்றையும் அதிவீரராமன் மொழி பெயர்த்தார். இவை எளிமையும் ஓசை இனிமையும் பெற்றவை. கரிவலம் வந்த நல்லூரில் கோயில் கொண்டுள்ள சிவன்மேல் இவர் பாடிய பதிற்றுப்பத்தந்தாதி, குட்டித் திருவாசகம் என்று போற்றப்படும். இன்றியமையா நீதிகளைச் சிறுவர் நெஞ்சினைப் பிணிக்கத் தக்க வகையில் எடுத்துரைக்கும் வெற்றி வேற்கையும் இவர் எழுதியதே.

பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த படிக்காசுப் புலவர் சந்தப்பா பாடுவதில் சமர்த்தர் ; வசைக்கவி இயற்றுவதில் வல்லவர். பல தனிப்பாடல்களோடு சில நூல்களும் ஆக்கி உள்ளார். தொண்டை மண்டல சதகம் இவர் ஆக்கியதே. இராமநாதபுரத்துக்கடுத்த கீழக்கரை ஊரினரும், இராமநாதபுரம் சேதுபதிக்கு அமைச்சராகத் திகழ்ந்தவரும், 'செத்தும் கொடுத்தான் சீதக்காதி' என்னும் பழமொழிக்கு உரியவருமான பெரிய தம்பி மரைக்காயரைப் பலவாறாகப் புகழ்ந்து பாடியுள்ளார் படிக்காசுப் புலவர். கி. பி. 1713 ல் நேர்ந்த பஞ்சத்தின் போது, 'ஓர் தட்டிலே பொன்னும் ஓர் தட்டிலே நெல்லும் ஒக்கவிற்கும் கார்தட்டிய பஞ்சகாலத்தில்...அன்னதானத்துக்கு மார்தட்டிய சீதக்காதி வரோதயனே" என்று புகழ்ந்தார் படிக்காசு புலவர்.

## இஸ்லாமிய நூல்கள்

சீதக்காதியின் ஆதரவைப் பெற்ற மற்றொருவர் உமறுப் புலவர் ஆவார். அவரது சீறாப்புராணம், மகம்

மது நபி அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டது. நபிகள் நாயகத்தின் பிறப்பு, திருமணம், ஆற்றல், வெற்றி முதலியன இதில் தெளிவாக விளக்கம் பெறுகின்றன. தமிழ் மரபும் தமிழ் உளப்பாங்கும் இஸ்லாமியக் கொள்கைகளோடு இசைந்து பொருந்தியிருப்பது இந்நூலின் சிறப்பாகும். அறம், பொருள், இன்பம் என்ற மூன்றையும் நுவலும் இக்காப்பியம், தமிழில் உள்ள இஸ்லாமிய இலக்கியங்களில் சிறந்தது. மற்றொரு இஸ்லாமியக் கவிஞர் சவ்வாது புலவர் (17-ஆம் நூ.) ஆவார். திருவாவடுதுறை ஆதீனத் தலைவரான சோமசுந்தர தேசிகரிடம் கல்விகற்று, இராமநாதபுரம் சமஸ்தானப் புலவராயிருந்த இவர், இஸ்லாமிய புண்ணியஸ்தலமான மதீனு நகர்மீது ஓர் அந்தாதியும், முகம்மது நபியின் மீது ஆண்டவர் பிள்ளைப் தமிழ் என்னும் நூலும் பாடினுர். குணங்குடி மஸ்தான் சாயபு பல பக்திப் பாடல்களையும் மெய்யுணர்வுப் பாடல்களையும் பாடினுர்.

## வீரமாமுனிவர்

மேனுட்டுக் கிறிஸ்தவர் ஆற்றிய தமிழ்த் தொண்டினையும் இங்குக் குறிப்பிடவேண்டும். இத்தாலியிலிருந்து வந்த தத்துவ போதக சுவாமிகள் (17-ஆம் நூ.) (Robert de Nobile) என்பவர் உரை நடையில் நூல்கள் இயற்றினுர். 1700-ல் கிறிஸ்துவ சமயப் பிரசாரத்துக்காகத் தமிழகத்துக்கு வந்த இத்தாலியரான பெஸ்கி, தமிழ் கற்று, வீரமாமுனிவர் என்ற தமிழ்ப் பெயரும் பெற்றுப் பல நூல்களைப் படைத்தார். இவரது தேம்பாவணி கிருஸ்தவ சமயம் பற்றிய தமிழ்க் காவியமாகும். அவர் தமிழிலக்கணத்தைக் கசடறக் கற்றதோடு, ஐந்திலக்கணத் தொன்னூல் விளக்கம் என்ற இலக்கண நூலும் இயற்றினுர். மேலும் அவர் தமிழ் எழுத்துக்களில் சீர்திருத்தம் செய்தார். சதுரகராதி என்பதும்

இவர் ஆக்கியதே. மேலும், அவரது "பரமார்த்த குரு கதை" நகைச்சுவை நிரம்பியது. வேதியர் ஒழுக்கம் என்பது இவரது உயரிய உரைநடை நூலாகும். எதுகை மோனைகளில் கட்டுண்டு கிடக்காது, இயல்பாக அமைந்த நடையில் பழகு தமிழில் வசன இலக்கியம் தோன்றுவதற்கு வழிகாட்டியவர் என்று வீரமா முனிவரைப் போற்றுவோம்.

## நாடகத் தமிழ்

இறுதியாக நாடக இலக்கியத்தைப் பற்றிக் குறிப்பிடவேண்டும். இயல், இசை, நாடகமென்று தமிழ் மூன்று வகைப்படுமென்பது மரபு. "முத்தமிழ்த் துறையின் முறைபோகிய உத்தமக் கவிஞர்" என்பது கம்பன் வாக்கு. "முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்" என்று இறைவனைப் பாடுவார் அப்பர் பெருமான். "தமிழ் மும்மை" என்பது சங்கம் மருவிய காலத்திலெழுந்த பரிபாடல் பயிலும் தொடர். ஆக, முத்தமிழ்ப் பாகுபாடு சங்க நூல்களில் இடம்பெறவில்லையென்றாலும், சங்கம் சார்ந்த காலத்திலிருந்தே வழக்கிலிருந்து வருகிறது. ஆனால் "நாடகத் தமிழ் என்பது பண்டைய தமிழகத்தில் சாகுந்தலம், ஹாம்லெத் போன்ற நாடகங்களைக் குறித்ததா?" என்ற கேள்விக்குக் கூறாக விடை தருவதற்கில்லை. கதை தழுவின கூத்து என்றே சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் நாடகம் என்பதற்குப் பொருள் தருவார். பக்தி இயக்கத்தால் இசைத் தமிழ் பெற்ற ஏற்றத்தோடு கதை தழுவிய கூத்தும் உயர்வு எய்தியது என்றும் கோயில் விழாக்களில் அத்தகைய கூத்துக்கள் நிகழ்ந்தன என்றும் கூறலாம். முதல் இராஜராஜன் தஞ்சையில் கட்டிய பெரிய கோயிலில் ஆண்டுதோறும் வைகாசி மாதத்து விழாவில் இராஜராஜேசுவர நாடகம் நடைபெற்றதாகவும் அதனை நடத்திய விஜயராஜேந்திர ஆசாரியரது குழுவி

னுக்கு ஊதியம் கொடுக்கப்பட்டதாகவும் கல்வெட்டி லிருந்து அறிகிறோம். இது தஞ்சைக் கோயிலைப்பற்றியும் இராஜராஜனைப்பற்றியும் அமைந்த முறையான நாடகமா யிருந்தது எனலாம், 12ஆம் நூற்றாண்டின் தொடக்கத் தில் பூம்புலியூர் நாடகம் என்பது இயற்றப் பெற்றதைப் பற்றிய கல்வெட்டுச் செய்தி உண்டு. இவற்றையெல் லாம் தொகுத்து நோக்குங்கால், சமயத் தொண்டோடு தொடர்பு கொண்டதாய், கோயிலில் வளர்ந்தது தமிழ் நாடகம் என்று ஊகிக்க முடிகிறது

அடுத்து, பள்ளு, குறவஞ்சி, நொண்டி நாடகம் என்ற மூவகைப் பிரபந்தங்களைக் குறிப்பிடவேண்டும். 17ம் நூற்றாண்டிலிருந்தே இவை புகழ் அடைந்தன. உழவுத் தொழிலைப் புகழ்ந்து பாடும் உழத்திப் பாட்டே பள்ளு இலக்கியத்துக்குத் தோற்றுவாய். பள்ளரும் பள்ளியரும் தம் வாழ்க்கையைப் பொருளாகக்கொண்ட பாட்டைத் தாளத்தோடு பாடி ஆடியதை அனுபவித்த கவிஞர்கள் பள்ளுப் பிரபந்தத்தைப் படைத்தனர். முக் கூடற் பள்ளு இவ்வகை இலக்கியத்தில் சிறந்தது. இயற்கை வர்ணனைக்கும் இலக்கியச் சுவைக்கும் புகழ் பெற்ற இதனுள் பல வரலாற்றுக் குறிப்புக்களும் உண்டு.

இயற்றமிழ் செய்யுட்களோடு, சிந்து, கீர்த்தனை, கண்ணிகள் போன்ற இசைப் பாடல்களும் விரவி வரு மாறு ஆக்கப் பெறுவது குறவஞ்சி. குறவன், குளுவன் முதலியோர் சேரி மொழியில் உரையாடுவர். திரிகூட ராசப்பக் கவிராயர் இயற்றிய குற்றாலக் குறவஞ்சி மிகச் சிறப்பான குறவஞ்சி இலக்கியமாகும். இயற்கை வர்ணனை நெஞ்சத்தை அள்ளும்; உரையாடல்கள் இனியவை; சிலேடைகள் அறிவுக்கு விருந்து; அரிய சொற்களோடு கொச்சைப் பேச்சு மொழிகளும் இடம் பெற்றுள்ளன. தஞ்சைக் கோயில் விழாவில் ஆடப் பெறும் சரபேந்திர பூபாலக் குறவஞ்சியும் குறிப்பிடத் தக்கது.

பாண்டிய நாட்டில், பாளையக்காரர்கள் ஆண்ட காலத்தில், குறிப்பாக 1650—1750 ஆண்டுகளில், நொண்டி நாடகங்கள் மிகுதியாகத் தோன்றின. நாடோடிப் பாடல்களின் அடிப்படையில் உருவான இப்பிரபந்தத்திலும் வழக்குச் சொற்கள் இடம்பெறும். திருட்டுக் குற்றம் புரிந்தவன், மாறுகால் மாறுகை வாங்கும் தண்டனைக்கு உள்ளாகிப் பின்னர் தான் புரிந்த தகாத செயலுக்கு வருந்தி, ஆண்டவன் அருளால் இழந்த உறுப்புக்களைப் பெற்றுப் பக்தனாக வாழ்கிறான் என்பதே இவ்வகைப் பிரபந்தத்தின் கதை. இதனைச் சுயசரிதையாகப் பாடி நடிப்பான் நடிகன். திருச்செந்தூர் நொண்டி, சீதக்காதி நொண்டி நாடகங்கள் குறிப்பிடத் தக்கவை.

இடை இடையே வெண்பா போன்ற இயற்றமிழ் செய்யுட்கள் இடம்பெற்றபோதிலும், நொண்டி நாடகம் பெரும்பாலும் நொண்டிச்சிந்து வகையிலே அமைந்தது.

இராம நாடக கீர்த்தனை என்ற நூலின் மூலம் அருணாசலக் கவிராயர் (18-ம் நூ.) நாடகத்துக்கு தொண்டாற்றினார். எளிய இனிய சொற்களால் அமைந்த இசைநாடகமாதலால், அதனைத் தமிழ் மக்கள் விரும்பிப் போற்றினர். அசோமுகி நாடகம் என்பதும் இவர் இயற்றியதே.

ஏட்டுச் சுவடிகளைப் பாதுகாப்பதிலும் தமிழ்ப் பயிற்சி அளிப்பதிலும் சைவ மடங்கள் வகித்த பாத்திரம் பெரிது. ஆனால் 18-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சுவாமிநாத தேசிகரும் சிவஞான சுவாமிகளும் சைவ நூல்களைமட்டுமே படிக்கவேண்டுமென்ற தவறான கருத்தைப் பரப்பினர். சங்க நூல்களையும் சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய காவியங்களையும் மாணவர்களுக்குப் பாடம் சொல்வதைச் சைவ மடங்கள் நிறுத்திக்கொண்டன. வைணவர்களிடமும் இந்தச் சமயக் காழ்ப்பு ஏற்பட்டிருந்தது. பல நூல்கள் மறைந்ததற்கு இச் சமயக் காழ்ப்பு முக்கியமான காரணமாகும்

# 7. தற்காலம் (1800 முதல்)

## 19-ம் நூற்றுண்டு

ஆங்கிலேயர் ஆட்சி நிலைகொண்ட பத்தொன்பதாம் நூற்றுண்டிலும் சில இலக்கிய முயற்சிகள் நிகழ்ந்தன. ஆயிரக் கணக்கான பிரதிகளை வெளியிடுவதற்கு வாய்ப்பாக அச்சுத் தொழில் பரவியது இக்காலத்தில்தான். அச்சு எழுத்தை எழுதா எழுத்து என்று போற்றினர். அதனைப் பயன்படுத்திப் பழைய நூல்களைப் பாதுகாக்கப் பாடுபட்ட பெரியோர் பலர். வித்துவான் தாண்டவராய முதலியார், விசாகப்பெருமாளையர், மழவை மகாலிங்கையர், வேதகிரி முதலியார் ஆகியோர் இப்பதிப்புத் துறையின் முன்னேடிகளாவர். திருக்குறள், நாலடியார், தேவாரம், கம்பராமாயணம் முதலான நூல்கள் அச்சேறின. சைவ நூல்களைத் திருத்தமாக அச்சிட்டு அருந்தொண்டாற்றினுர் ஆறுமுக நாவலர். தொல்காப்பியம், கலித்தொகை, சூளாமணி ஆகியவற்றேடு வேறு சில நூல்களையும் பதிப்பித்த பெரியார் தாமோதரம் பிள்ளை ஆவார். பதிப்புத் துறையில் தன்னேரில்லாத் தொண்டு புரிந்த டாக்டர் சாமிநாதையரும் 19-ஆம் நூற்றுண்டிலேயே தம் பணியைத் தொடங்கிவிட்டார்.

புதிய இலக்கிய கர்த்தாக்களில் முதன்மையாகக் குறிப்பிடத் தக்கவர் வள்ளலார் இராமலிங்க சுவாமிகள்.

எளிமையும் இனிமையும் இசை நலமும் ததும்பும் அவரது அழகிய தோத்திரங்கள் கற்பவர் உள்ளத்தைக் கொள்ளை கொள்வன. அவரது கீர்த்தனங்களும் கும்மியும் கண்ணியும் இசைத் தமிழுக்கு வளம் கூட்டின. மேலும் அவர் எளிய இனிய உரைநடையில் மனுமுறைகண்ட வாசகம் எழுதினர். எல்லா உயிர்களிலும் இறைவன் திருநடனம் புரிகிருனென்று கூறி ஜீவகாருண்ய நெறியினைக் கற்பிக்கிருர் வள்ளலார். ஒவ்வொரு உயிரையும் புனிதமான தாகக் கருதி அன்பு சொரிந்து வாழவேண்டுமென்பதே வடலூரார் காட்டும் வழி. உயிர்களை ஒருசேரப் பிணைக்கும் ஆன்மநேய ஒருமையை வற்புறுத்தும் வள்ளலார், சமரச சன்மார்க்கத்தை விரிவான முறையில் நிறுவினர். பல ஸ்தல புராணங்களைப் பழைய நெறியில் இயற்றிய மகாவித்வான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை, இந்நூற்ருண்டின் சிறந்த புலவர்களில் ஒருவர். கிறிஸ்தவ சமயப் பொருளை விளக்கும் முறையில் ஜான்பன்யன் ஆங்கிலத்தில் இயற்றிய பரதேசியின் விமோசனப் பிரயாணம் (Pilgrim s Progress) என்ற நூலைத் தழுவி, இரட்சணிய யாத்திரிகம் என்ற காப்பியத்தைப் படைத்தார் கிருஷ்ண பிள்ளை. இது தண்டியலங்கார இலக்கணத்தைப் பின் பற்றுகிறது; கம்பராமாயணத்தின் இலக்கிய வழியினைத் தழுவுகிறது. வில்லியப்பப்பிள்ளை தாதுவருஷப் பஞ்சத்தை (1876) பொருளாக்கொண்டு எளிய நடையில் பாடிய (பஞ்சலட்சணத் திருமுக விலாசம்,) மிகச்சிறந்த நகைச்சுவை நூலாகும். பல கீர்த்தனை நூல்களை இயற்றிய பெரியாரான கோபாலகிருஷ்ண பாரதியாரின் நந்தன் சரித்திரக் கீர்த்தனையின் இசையிலும் எளிமையிலும் கருத்திலும் மனமுருகாதார் இல்லை. எளிய சொற்களில் இன்னேசையுடன் கூடிய சந்தங்களில் காவடிச்சிந்துப் பாடல்களைப் பாடி, கற்றவர் கல்லாதவர் அனைவரையும் கவர்ந்தார் அண்ணுமலை ரெட்டியார். நாடகத் துறையில் இராமச்சந்திரக் கவிராயர் இயற்றிய சகுந்தலை விலாசம், பாரத விலாசம் முதலியனவும் வேறு

சிலர் எழுதிய அரிச்சந்திர நாடகம், சாவித்திரி நாடகம் முதலியனவும், காசிவிசுவநாத முதலியார் எழுதிய டம்பாச்சாரி விலாசமும் குறிப்பிடத் தக்கவை. இவையே தற்கால நாடகங்களுக்கு வழிகாட்டிகள். நடிப்பதற்கன் றிப் படிப்பதற்கென்றே பேராசிரியர் சுந்தரம்பிள்ளை எழுதிய நாடகம் மனோன்மணியம் என்பது. ஆங்கிலக் கதை ஒன்றைத் தழுவி அகவற்பாவில் அமைந்த இது இலக்கிய நாடகங்களுக்கிடையே தனிச் சிறப்பு வாய்ந் தது. செய்யுளும் வசனமும் கலந்து, ரூபாவதி, கலாவதி என்னும் நாடகங்களை உயர்ந்த நடையில் எழுதிய வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், நாடக இயல் என்ற இலக்கணமும் இயற்றினார். கால்டுவெல் எழுதிய திராவிட மொழிகளின் ஒப்பிலக்கண நூல் இந்நூற்றாண் டில் எழுந்த குறிப்பிடத்தக்க ஆராய்ச்சி நூலாகும்.

உரைநடை தளிர்த்தது. இந்த நூற்றாண்டில் இராமா யணமும் மகாபாரதமும் வசனத்தில் அமைந்தன. தாண் டவராய முதலியார் பஞ்சதந்திரத்தை மொழிபெயர்த்தார். ஆறுமுக நாவலரால் தமிழ் உரைநடை திருத்தம்பெற்றது. அவர் திருவிளையாடற் புராண வசனமும் பெரியபுராண வசனமும் எழுதியதோடு பாலர் பாடங்களும் இயற்றினார். ராஜமையர் எழுதிய கமலாம்பாள் சரித்திரம், மாயூரம் வேதநாயகம் பிள்ளை எழுதிய பிரதாப முதலியார் சரித் திரம், மாதவய்யா எழுதிய பத்மாவதி சரித்திரம் ஆகியவை தமிழில் எழுந்த முதல் நாவல்களாகும்.

திருக்குறள், நாலடி, திருவாசகம் ஆகியவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தும் வேறுசில இலக்கிய நூல்களை எழுதியும் தமிழின் பெருமையை மேனாட்டார் உணரச்செய்த பெரியாரான டாக்டர் போப் அவர்களை இங்குச் சிறப்பாகக் குறிப்பிடவேண்டும்.

## மறுமலர்ச்சி சகாப்தம்

இருபதாம் நூற்றாண்டை தமிழ் இலக்கியத்தின் மறுமலர்ச்சி சகாப்தம் என்போம். ஏறத்தாழ மூன்று நூற்றாண்டுக்காலம் ஒடுங்கியிருந்த தமிழ் இலக்கியம் மதிப்பிடற்கரிய புதிய வளம்பெற்ற நூற்றாண்டு இது. உரையாசிரியர் காலத்தில் பண்டைய நூல்களைக் கற்று ஊற்றம் பெற்று முன்னேறவேண்டுமென்ற ஆர்வம் வெளிப்பட்டது உண்மை. ஆனால் அரசியல் பொருளாதார சூழ்நிலைகளின் காரணமாக, அந்த ஆர்வம் தடைபட்டது. 17-ஆம் நூற்றாண்டிலிருந்து தமிழின் இயற்கையான ஆற்றலையும் வேகத்தையும் புலப்படுத்தும் கவிஞர் அரிதாயினர். மடாலயங்களில் தஞ்சம் புகுந்த தமிழ் வறட்டுத்தனமான தத்துவச் சர்ச்சைகளுக்கே பெரிதும் பயன்பட்டது. ஸ்தல புராணங்களெல்லாம் ஒரே நெறியில் சென்று படிப்போரைச் சலிப்படையச் செய்தன; அவற்றில் காவியச் சுவையைக் காண்பதும் கடினமாயிருந்தது. சிற்றரசர்களின் அரண்மனைகளில் தஞ்சம் புகுந்த தமிழோ, சிருங்காரப் பாடல்களில் காமவிகாரங்களை வர்ணிக்கும் கருவியாகத் தவித்தது. பொதுவாக யமகம், திரிபு, மடக்கு, நாகபந்தம் போன்ற விந்தைகளே இலக்கியம் என்ற கருத்து ஓங்கியது. வழக்கொழிந்த சொற்கள், ஆடம்பரமான பிரயோகங்கள், வரைநெறியின்றி வடசொற்களைத் தொடுக்கும் பகட்டாரவாரம்,

எதுகை மோனைப் பித்து ஆகிய இவையெல்லாம் தமிழ் நடையைக் கெடுத்தன. இந்தக் காரிருளுக்கிடையே தோன்றிய மின்னல்களாகவே, குற்றாலக் குறவஞ்சி, முக்கூடற்பள்ளு முதலியவற்றைக் கருதல்வேண்டும்.

தமிழ் இலக்கிய உலகைக் கவ்வியிருந்த இந்த அந்தகாரத்தை அகற்றும்பொருட்டு முதல் முயற்சிகள் 19-ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்தன. ஆனால் வள்ளலாரும் நாவலரும் கோ. பாரதியாரும் முதல் நாவல்களது ஆசிரியர்களும் மேற்கொண்ட அம்முயற்சிகள், புதிய யுகத்தின் நோக்கையும் போக்கையும் உணர்ந்து நிகழ்ந்தன வென்று சொல்லமுடியாது. அதற்குரிய நிலைமையும் பண்படவில்லை. இருபதாம் நூற்றாண்டில்தான், இந்திய விடுதலை இயக்கமாக வடிவெடுத்த பொதுஜனப் புத்தெழுச்சியில் தமிழ் மொழியும் இலக்கியமும் மறுமலர்ச்சியினைக் கண்டன.

இந்த மறுமலச்சிக்குத் துணை நின்றவர் பலர். அவர்களில் செயற்கரிய சாதித்த பெருமக்கள் ஐவராவர் :—

(1) பழமையில் வேரூன்றி நின்றவாறே, புதிய யுகத்துக்குத் திடமான அடிப்படை அமைத்த டாக்டர் சாமிநாத ஐயர் ;

(2) தமிழை வாழ்வித்த மூவரான கம்பன், வள்ளுவர், இளங்கோ ஆகியோருடன் சேர்த்து எண்ணத்தக்க கவிஞராகத் தோன்றி, தளைப்பட்டிருந்த தமிழுக்கு விடுதலை தந்து, ஆடிப் பதினெட்டாம் பெருக்கெனத் தமிழ் இலக்கியம் பெருக்கெடுக்கச் செய்த சுப்பிரமணிய பாரதியார் ;

(3) இலக்கிய மணம் கமழும் தூய தமிழில் பற்பல புதிய கருத்துக்களையும் செய்திகளையும் வெளியிடும் ஆற்றலைக் கூட்டித் தமிழ் உரைநடையினைச் செம்மை செய்த தமிழ்த் தென்றல் திரு. வி. கல்யாணசுந்தரனார் ;

(4) ஏறத்தாழ முப்பதாண்டுக்காலம், உரைநடை உலகின் சாம்ராட்டாகச் சிறந்து உயிர்த் தளிர்ப்புள்ள எளிய தமிழால் உலகை அளக்கமுடியுமென்பதை நடை முறையில் காட்டிய பேராசிரியர் ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி);

(5) இலக்கிய ஆராய்ச்சித் துறையில் வரலாற்று உணர்வோடு அரிய தொண்டாற்றிய ஆராய்ச்சி மன்னர் வையாபுரிப்பிள்ளை.

## டாக்டர் ஐயர்

பத்துப்பாட்டு, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், புறநானூறு, சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி ஆகியவை ஐயரவர்கள் நமக்குத் தந்த பண்டைத் தமிழ் கருவூலங்களாகும். பட்டி தொட்டிகளின் வீட்டுப் பரண்களில் கவனிப்பாரற்றுக் கிடந்த இலக்கிய ஏடுகளை, காலதேவனுக்கும் தட்ப வெப்ப நிலைக்தும் கறையானுக்கும் இரையாகிக்கொண்டிருந்த ஏடுகளை, ஊர் ஊராகக் கட்டுச் சோற்றுடன் கால்கடுக்க நடந்த ஐயரவர்கள் தேடித் தொகுத்தார்கள். அந்த ஏடுகளில், பாட்டின் அடிகள் ஒன்றையொன்று தொடர்ந்தும், செய்யுளும் உரையும் எடுத்துக்காட்டுக்களும் இனங்காண முடியாதபடி சேர்ந்தும் கிடந்தன; எழுத்தைப் புரிவதும் பிழையைத் தேர்வதும் கடினமாயிருந்தன. இத்தகைய பிரதிகளை ஒப்புநோக்கி நுணுகி ஆராய்ந்து திருத்தமான பதிப்புக்களை வெளியிட்டார் ஐயர்; உண்மையைவிட உயர்ந்ததொன்றில்லை என்று கருதிக் கருமம் புரிந்ததால், அவரது பதிப்பு என்றால் பிழை இருக்காது என்று கற்றவர் போற்றினர். பழைய நூல்களைச் செவ்விய முறையில் பதிப்பிட்டதோடு, அவற்றில் பல ஆராய்ச்சிக் குறிப்புக்களையும் அருளினர். அவர் பதிப்பித்த சங்க நூல்களும் காப்பியங்களும் புராணங்களும் பிரபந்தங்களும் இலக்கண நூல்களும், அன்னாரின்

தமிழ்ப் பற்றும் தளரா முயற்சியும் நிகழ்த்திய விந்தைக ளென்றே கொள்வோம்.

"பொதியமலைப் பிறந்தமொழி வாழ்வறியும்
காலமெலாம் புலவர் வாயில்
துதியறிவாய், அவர்நெஞ்சின் வாழ்த்தறிவாய்,
இறப்பின்றித் துலங்கு வாயே!"

என்று இந்தப் பெருமகனுக்குப் பாமாலை சூட்டினான் பாரதி.

ஐயரவர்கள் தமிழ் உரைநடையின் முன்னோடிகளில் ஒருவராகவும் விளங்கினார். தமிழ்ப் புலமைக்கு உரையாணி எனத் திகழ்ந்த அவர், எளிமை, நேர்மை, தெளிவு ஆகிய பண்புகளுக்குரிய உரைநடையையே ஆண்டார். வழக்கொழிந்த அருஞ் சொற்களை நாடாது, பழகு தமிழையே பயன்படுத்தினார். ஆனால் திரு. வி. க. வின் நடையிலுள்ள கலைச் செம்மையினை ஐயரவர்களது தமிழ் நடையில் காண்பது அரிது.

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை சரித்திரம், என் சரித்திரம், நினைவு மஞ்சரி, நான் கண்டதும் கேட்டதும், பழையதும் புதியதும் முதலியன ஐயரவர்களது வசன நூல்களாகும். மீனாட்சிசுந்தரம் பிள்ளை சரித்திரம், தமிழ் வாழ்க்கை வரலாற்றுத் துறையின் முதற் பெரும் நூலாகும். விவரங்களைச் சேகரிப்பதில் ஆசிரியருக்கு இருந்த ஆர்வமும், சுற்றுணர்ச்சியைப் படைக்கும் உணர்வும், அந்நூலில் வெளிப்படுகின்றன. எத்தனையோ நிகழ்ச்சிகளைப் பற்றிப் படிக்கிறோம். சமுதாய வரலாற்றுக்கு மிக்க பயன் தரத்தக்க நூல்அது. ஆனால் முன்னோரைப் பக்தி நோக்குடன் அணுகும் ஐயரவர்களிடம் குணத்தோடு குறையினையும் கணிக்கும் விமர்சனங்களை எதிர்பார்க்க முடியாது. எனவே, அவரது குருவான மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் செய்யுட்களை அவர் போற்

றிப் புகழ்வதில் வியப்பில்லை. பிள்ளை அவர்கள் யாப்பு வகைகளது நுட்பங்களைக் கசடறக் கற்றுத் தேர்ந்த புலவரே என்றாலும், அவரிடம் கவித்துவ ஆற்றலைக் காண்பது அரிதே என்பதால் இலக்கியத் திறனாய்வாளன் ஐயரவர்களது பக்திநோக்குப் புகழ்ச்சியை ஏற்கமாட்டான்.

## மகாகவி பாரதி

தமிழுக்குப் பாரதி ஆற்றிய தொண்டினைக் கருதியே நாம் இக்காலத்தைப் பாரதி சகாப்தம் என்போம். கம்பனுக்குப் பின் பாரதியிடமே தமிழின் இயல்பான அழகையும் ஆற்றலையும் காண்கிறோம். பேச்சுத் தமிழுக்கும் இலக்கியத் தமிழுக்கும் இடையே இருந்த அகன்ற அகழியை நீக்கும் அற்புதத்தைப் பாரதி சாதித்தான். தமிழ் இலக்கணம், தமிழ் இலக்கிய மரபுகள் ஆகியவற்றைச் சாராம்சத்தில் தழுவி நின்றவாறே, பழகு தமிழில் அழகும் ஆற்றலும் வாய்ந்த நடையைப் படைத்தான் பாரதி.

'' எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய சந்தம், பொதுஜனங்கள் விரும்பும் மெட்டு இவற்றினை உடைய காவியமொன்று தற்காலத்தில் செய்து தருவோன், நமது தாய்மொழிக்குப் புதிய உயிர் தருகின்றான்'' என்று பாஞ்சாலி சபதத்தின் முன்னுரையில் மொழிந்தான் பாரதி. அக்கொள்கையிலிருந்து அவன் எந்நாளும் வழுவவில்லை.

உள்ளத்தே உண்மைஒளி உண்டாயின்
வாக்கிலே ஒளிஉண் டாகும்

என்று கூறினான் பாரதி. அந்த ஒளி—கவிஞனது உள்ளுணர்வை ஒளிப்பிழம்பாக்கும் சத்தியத்தின் வெண்சுடர்—பாரதி பாடல் ஒவ்வொன்றிலும் பிரகாசிக்கிறது. '' அச்சமும் பேடிமையும் அடிமைச் சிறுமதியும் '' உச்சத்தில் கொண்ட ஊமை ஜனங்களை, அஞ்சாநெஞ்சராய்

ஆர்த்தெழுந்து ஆங்கிலேயராட்சியினை அறைகூவச் செய்தான் பாரதி. அன்னிய ஆதிக்கம் என்ற அவலத்தை அகற்றுவதற்கு அணிதிரட்டும் தேசியத்தை ஒரு புதிய சமயமாகவே அவன் படைத்துவிடுகிறான். பாரத தேவியே பராசக்தியின் மூர்த்தம்; காயமழல் ஏந்திய பித்தனின் காதலி; "வெண்மை வளர் இமயாசலன் தந்த விறன்மகள்". செப்பும் மொழி பதினெட்டாயினும் சிந்தனை ஒன்றுடையாள். வேதம் வரைந்தது அவளது கரம்; கீதை புகன்றது அவளது வாய்; காண்டிவம் ஏந்தியது அவளது தோள். இலங்கை அரக்கரை அழித்ததும் அந்த ஆரிய ராணியின் வில்லே. அறம் கொன்ற அரசரை விழுங்கிப் பின் ஆனந்தக் கூத்தாடுவாள் அவள். அவளுக்கு நாடு இமயம் முதல் குமரிவரைப் பரவிப்படர்ந்த பரதகண்டம்; நகர் காசி; ஆறு கங்கை; மலை இமயம்; ஊர்தி சிங்கம்; முரசு வேதம். அவள் பெயரைச் சொல்லியே பயமும் பகையும் வெல்வர் பாரதவீரர். இவ்வாறெல்லாம் வழிவழி வந்து நம் குருதியில் கலந்த கதைகளையும் கருத்துக்களையும் புதிய முறையில் தொடுத்து, பாரததேவி வழிபாட்டு மதத்தைப் படைக்கிறான் பாரதி. அவளைச் சுதந்திர தேவியாகக் காண்பதற்காகக் கருமம் புரிவதே மெய்யான தவம் என்பான். ஆட்டினைக் கொன்று வேள்விகள் இயற்றி வீட்டினைப் பெறுவதற்கு விரும்புவோர் சுயநலமிகளென்றும் நெஞ்சகக் குருதியை நிலத்திடை வடித்து வஞ்சகம் அழிக்கும் மாமகம் (மகம்—வேள்வி) புரிவதே சாலவும் சிறந்தது என்றும் சத்ரபதி சிவாஜி வாயிலாகச் சங்கநாதம் செய்வான்.

இந்தியத் தாயின் பன்முகங்களில் ஒன்றாகத் தமிழ்த் தாயைக் கண்டான் பாரதி.

வேதம் உடையதிந்த நாடு—நல்ல
வீரர் பிறந்ததிந்த நாடு:
சேதம் இல்லாதஹிந்து ஸ்தானம்—இதைத்
தெய்வமென்று கும்பிடடி பாப்பா!

என்று பாரதநாட்டுப் பற்றைப் புகட்டும் பாப்பாப் பாட்டிலேயே,

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற—எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா!

என்று தமிழகப் பற்றையும் ஊட்டுகிருன்.

செந்தமிழ் நாடென்னும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே

என்பான். வேதம் நிறைந்த தமிழகம், வள்ளுவனை உலகினுக்கே அளித்த தமிழகம், கம்பனைப் பெற்ற தமிழ்நாடு, சிலப்பதிகாரம் என்ற மணியாரத்தை அணிந்த நாடு என்றெல்லாம் தமிழ்நாட்டின் பெருமைகளை விதந்தோதுகிருன். தமிழின் இனிமையைப் புகழ்ந்து, அது எட்டு திக்கிலும் வளரும் கலைச் செல்வங்கள் அனைத்தையும் பெற்று வலிவும் பொலிவும் பெறவேண்டுமென்று துடிக்கிருன். மேற்கே வளரும் புத்தம் புதிய கலைகளைச் சொல்லும் திறம் பெற்றதாகக் தமிழை வளப்படுத்த வேண்டுமென்று ஆணையிடுகிருன் பாரதி. அறிவு மொழியாக ஆங்கிலத்தை வரித்துக்கொண்டு, கடையிலும், நடையிலும் அடுக்களையிலும் பயிலப்பெறும் தாழ்நிலையிலேயே தமிழ் உழலவேண்டும் என்றவரைச் சாடுகிருன் பாரதி.

வாழிய செந்தமிழ் வாழ்க நற்றமிழர்
வாழிய பாரத மணித்திரு நாடு

என்று உரைத்து, தமிழ்ப்பற்று தமிழர் இனப்பற்று, இந்திய நாட்டுப்பற்று ஆகிய மூன்றும் இயைந்தமைந்த பார்வையை வழிவழிவந்த பண்பாட்டில் விளக்கம் பெறும் பார்வையை, வையத்தில் வாழ்வாங்கு வாழ்வதற்கு ஏற்ற விழுப்பமான பார்வையை, பாரதி தாரக மந்திரமாக அமைத்துக்கொடுக்கிருன்.

சாதிக் கொடுமைகளோடு சாதிப் பிரிவுகளையே சாடுகிறான் பாரதி :

தகரென்று கொட்டுமுரசே—பொய்மைச்
சாதி வகுப்பினையெல்லாம்

என்றும்,

பறையருக்கும் இங்குத்திய
புலையருக்கும் விடுதலை

என்றும் பாடுகிறான்.

பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்
பாரினில் பெண்கள் நடத்தவந்தோம்

என்று கும்மியடிக்கிறாள் பாரதியின் புதுமைப் பெண். அவள் கற்பை இருபாலார்க்கும் பொதுவாக்கத் துடிக்கிறாள். காதலன் ஒருவனைக் கைப்பிடித்து அவன் காரியம் யாவினும் கைகொடுத்து மாதர் அறங்களுக்கு புதிய பெருமை தேடுவாளாம். எனவே,

நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்
நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும்
திமிர்ந்த ஞானச் செருக்கும் இருப்பதால்
செம்மை மாதர் திறம்புவ தில்லையாம்

என்பான் பாரதி.

அனைத்து உயிர்களிலும் இறைமையைக் காணும் அத்வைதி பாரதி. அவனிவாழ்வோர் அனைவரையும் அணைத்துக்கொள்ளும் மனவிரிவை அந்த அத்வைதம் அவனுக்கு அளித்தது.

இல்லாமையும் கல்லாமையும் இல்லாதொழிந்த புத்துலகத்தைக் காணத் துடித்தது அவன் நெஞ்சம். இல்லையெனும் கொடுமையை உலகில் இல்லையாகச் செய்வதற்கு அருள்புரிய வேண்டுமென்று திருமகளிடம் மன்றாடுகிறான். வீடுதோறும் கலையின் விளக்கம் காண

பதே கலைமகள் வழிபாடு என்பான். மாநிலத்துக்குத் தொண்டுபுரிய வல்லமை தாராயோ என்று சிவசக்தியை உரிமையுடன் வினவுகிறான். காணிநிலப் பாட்டில் எளிமையும் தூய்மையும் இன்பமும் நிறைந்த சூழலில் பொதுவுடைமைப் பெருவாழ்வைப் படைத்துக் காட்டு கிறான். ஏற முடியாத எவரெஸ்ட் மலைமுடிமீது ஏறி நின்று, உலகப் போக்குகளின் உயிர்த்துடிப்பை உணர் கிறான். லெனின் தலைமையில் கிளர்ந்தெழுந்த ரஷ்யப் புரட்சியினை மாகாளி பராசக்தியின் கடைக்கண் பார்வை யால் நேர்ந்ததாகவே சித்திரிக்கிறான். அம்மை மனம் கனிந்ததால் எழுந்த புரட்சிப் புயலின் வேகத்தில், காடெல்லாம் விறகாவதுபோலப் பிற்போக்காளர் கூட் டம் அழிந்ததென்கிறான். ரஷ்யப் புரட்சி, வரலாற்றில் புதியதோர் திருப்பம் என்பதை உள்ளுணர்வால் தெளிந்த கவிஞன்,

> இடிபட்ட சுவர்போலே கலிவிழ்ந்தான்
> கிருதயுகம் எழுக மாதோ

என்று பாடுகிறான்.

இத்தகைய அத்வைத கவிஞன் பாரத நாட்டிலும் பொதுவுடைமை மலரவேண்டுமென்று பெரிதும் விரும் பியது இயல்பே.

> முப்பதுகோடி ஜனங்களின் சங்கம்
> முழுமைக்கும் பொதுவுடைமை
> ஒப்பிலாத சமுதாயம்
> உலகத்துக் கொருபுதுமை

யாக, உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்யும் நவயுக பாரதத்தைக் காண்கிறான் பாரதி.

கண்ணன் பாட்டும் பாஞ்சாலி சபதமும் குயிற் பாட்டும் பாரதியின் முப்பெரும் பாடல்களாம். அனை வர்க்கும் தோழனாய், குற்றமில்லா குறும்பை நாடும்

குழந்தை உள்ளம் படைத்த கோமானுய், நகைச்சுவை மிகுந்த நன்னெஞ்சனுய், நல்லாசிரியனுய், எளிதில் அடையத்தக்க இறைவனுய், கவிஞர் கற்பனையில் வளர்ந்து இந்திய மக்கள் உள்ளத்தைக் கொள்ளைகொண்டவன் கண்ணன். கண்ணனைத் தெய்வமாகவும் தாயாகவும் தந்தையாகவும் குருவாகவும் காதலனுகவும் பாடுவதுடன் அமையாது, தோழனுகவும் சேவகனுகவும் பாரதி பாடுவது குறிப்பிடத்தக்கது. சொல் எளிமையும் கருத்துச் செறிவும் இசைந்தமைந்ததாகக் கண்ணன் பாட்டு விளங்குகிறது. கவிதை யழகையும் விஞ்சுவது பண்ணழகு. ''கடற்கரையில், சாந்திமயமான சாயங்கால வேளையில் உலகனைத்தையும் மோகவயப்படுத்தி, நீலக்கடலையும் பாற்கடலாக்கும் நிலவொளியில், புதிதாகப் புனைந்த கீர்த்தனங்களைக் கற்பனு கர்வத்தோடும் சிருஷ்டி உற்சாகத்தோடும் ஆசிரியன் தனது கம்பீரமான குரலில் பாடினதைக் கேட்ட ஒவ்வொருவரும் இந்நூலிலுள்ள பாட்டுக்களை மாணிக்கங்களாக மதிப்பர்'' என்று கண்ணன் பாட்டின் முகவுரையில் திறனுய்வுக் கலையில் வல்ல வ. வெ. சு. ஐயர் கூறுகிறுர்.

பாஞ்சாலி சபதம் அழியாப் புகழுக்குரிய காவியத்துணுக்கு ஆகும். எளிய சொற்களைக்கொண்டு சிந்து வகைகளில் பாடப்பெற்ற அரிய இலக்கியம் இது. நாடகப் போக்கு அதன் சிறப்பியல்புகளில் ஒன்று. பாரதத் தாயின் வடிவமாகப் பாஞ்சாலியைச் சித்திரிக்கும் இப்பாட்டு, பாஞ்சாலியின் சபதத்தோடு முற்றுப்பெறுவது பொருத்தமே. பார்த்தன்,

கார்த்தடங் கண்ணி எந்தேவி—அவள்
கண்ணிலும் காண்டிப வில்லினும் ஆணை;
போர்த்தொழில் விந்தைகள் காண்பாய்—ஹே!
பூதலமே! அந்தப் போதினில் என்ருன்

விந்தைகள் கண்டு பாரதம் விடுதலை பெற்றது பிற்கால வரலாறு.

குயிற்பாட்டு உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் காதற் கவிதை. பாரதியின் கவித்துவம் புதிய புதிய கற்பனைச் சிகரங்களைத் துணிச்சலோடு தாவிப் பற்றுகிறது. சோலை, குரங்கு, மாடு, சூரியோதயம், சங்கீதம், குயில் பெண்ணாக மாறி நின்ற அழகு ஆகியவற்றின் வர்ணனைகள் மகோன்னதமானவை. குயிற் பாட்டு பாரதியின் நகைச்சுவைக்கும் சிறந்த எடுத்துக்காட்டு. எந்த இலக்கியத்திலும் உள்ளுறை பொருளைத் தேடும் சமயப்பித்து பல புலவர்களது வியாதியாகிவிட்டதென்பதை பாரதி அறிவான். அப்புலவர்களிடம் குறும்பு செய்யக் கருதிய பாரதி,

ஆன்ற தமிழ்ப் புலவீர், கற்பனையே யானாலும்
வேதாந்த மாக விரித்துப் பொருளுரைக்க
யாதானும் சற்றே இடமிருந்தாற் கூறீரோ ?

என்ற வினாவுடன் குயிற்பாட்டை முடிக்கிறான்.

உரைநடையினை உருவாக்குவதிலும் பாரதியின் பங்கு பெரிது. வழக்கொழிந்த சொற்களையும் கடின சந்திகளையும் நீக்கியும் நடையின் விறைப்பையும் முறுக்கையும் தளர்த்தியும், வேகமும் விறுவிறுப்பும் கொண்ட தமிழ்நடையை உருவாக்கினான் பாரதி. பாரதி வசன நூல்களில் சிறந்தது ஞானரதம் ஆகும். நிறைவுபெறாத சின்னச்சங்கரன் கதை ஜமீன்தார் வாழ்வைக் கிண்டல் செய்யும் அரிய நகைச்சுவைக் களஞ்சியம். சந்திரிகையின் கதை என்ற பூர்த்தியாகாச் சமூக நாவலும், திண்டிமசாஸ்திரி, சொர்ணகுமாரி என்ற சிறுகதைகளும் குறிப்பிடத்தக்கவை. பாரதியின் பகவத்கீதை மொழிபெயர்ப்பு சரிநுட்பமாகவும் தெளிவாகவும் இலக்கிய நயத்தோடும் அமைந்திருப்பதைக் கற்றவர் அனைவரும் பாராட்டுகின்றனர்.

## தமிழ்த்தென்றல் திரு. வி. க.

விடுதலை இயக்கம், தொழிலாளர் இயக்கம், தமிழ் மறுமலர்ச்சி இயக்கம் ஆகிய மூன்று துறைகளிலும் சீரிய தொண்டாற்றியவர் திரு. வி. க. தேசபக்தன், நவசக்தி ஆகிய பத்திரிகைகளின் மூலம் அரசியல் பொருளாதார விவகாரங்களைத் தெள்ளிய தமிழில் முதலில் விளக்கிக் காட்டிய பெருமை இவருக்கே உரியது. இலக்கிய நயம் செறிந்த நடையை, அவர் ஆண்டார். தொடர்வாக்கியங்களை விடுத்து, ஆற்றல்பட்டுத் தெறிக்கும் சிறுசிறு வாக்கியங்களையே எழுதி, வாக்கிய அமைதியில் புரட்சி செய்தவர் திரு. வி. க. காந்தீயத்தின் சத்தியமும் அகிம்சையும், மார்க்சீயத்தின் பொதுவுடைமை இலட்சியமும் அவரை ஈர்த்தன. அவர் பெண்ணுரிமைக்காகச் சிறப்பாக வாதாடினர். சகல சமயங்களையும் சமரசநோக்குடன் கருதிச் சன்மார்க்கத்தைப் பரப்பினர். முருகன் அல்லது அழகு, பெண்ணின் பெருமை, இந்தியாவும் விடுதலையும், வாழ்க்கைக் குறிப்புக்கள் ஆகியவை அவரது சிறந்த நூல்கள். அவர் எழுதிய கவிதைகளில் 'அருளும் பொருளும்' குறிப்பிடத்தக்கது. திருக்குறளின் பாயிரத்துக்கும் இல்லறவியலுக்கும் அவர் ஓர் அரிய உரை வழங்கியிருக்கிறர்.

## உரைநடை மன்னன் கல்கி

பத்திரிகைத் தொழிலில் திரு. வி. க.விடம் பயிற்சி பெற்ற கல்கி, உரைநடை இலக்கியத்தின் பல துறைகளுக்கு வளம் கூட்டித் தன்னேரில்லா எழுத்தாளராக உயர்ந்தார். எவ்வளவு சிக்கலான விஷயத்தையும், பாமரனும் புரியும் வகையில், உயிராற்றல் மிகுந்த தமிழில் விளக்கும் திறம் அவரிடம் நிறைந்திருந்தது. அவரது சிறுகதைகளில் பலவற்றைக் குறுநாவல்களென்றே கூறலாம்; எனினும் விதவிதமான நிகழ்ச்சிகளையும் பாத்திரங்

களையும் சித்திரிக்கும் அவை படிப்போருக்குத் தெவிட்டாத விருந்தாகும் கட்டுரைக் கலையில் அவருக்கிருந்த பாண்டித்தியம், பாரதி பிறந்தார், இலங்கைப் பிரயாணம், மூன்றுமாத கடுங்காவல் முதலியவற்றுல் விளங்கும். தமிழ்நாட்டின் தேசிய ஜனநாயக இயக்கத்தில் அவரது அறிவுசான்ற அரசியல் விமர்சனங்கள் வகித்த பாத்திரம் மகத்தானது. கலைஞானமும் ரஸனையும் மிகுதியாகப் பெற்றுப் பொலிந்த கல்கியின் கலை விமர்சனங்கள், பரத நாட்டியம் புத்துயிர் பெறுவதற்கும், சாஸ்திரீய சங்கீத ரஸனை பெருகுவதற்கும், தமிழிசை இயக்கம் வளர்ந்தோங்குவதற்கும் பெருந்துணையாக விருந்தன. அவர் எழுதிய சரித்திரக் கதைகளை (பார்த்திபன் கனவு, சிவகாமியின் சபதம், பொன்னியின் செல்வன் முதலியன.), யதார்த்த சரித்திர நவீனங்களாகக் கருத முடியாது. சர் வால்டர் ஸ்காட் ஆங்கிலத்தில் எழுதிய வரலாற்று நாவல்களைப்போல் வியப்பூட்டும் இயல்பைத் தலைமையாகக்கொண்ட நாவல்களாகவே அவை அமைந்துள்ளன. இவ்வகை அற்புதச் சரித்திர நவீனத்தில், பரபரப்பூட்டும், எதிர்பாராத நிகழ்ச்சிகள் மூலம் கதை உருப்பெறுகிறது; கதை விரும்பிய முடிவை நோக்கித் தானடித்த மூப்பாக முன்னேறுவதால், பாத்திரப்படைப்பில் வெற்றி கிட்டுவது அருமையே. எனினும், கல்கியின் சரித்திரக் கதைகள் தமிழ்நடைச் சிறப்பாலும் தேசிய உணர்ச்சியினைத் தூண்டிவிடும் தன்மையாலும் சிறந்து விளங்குகின்றன. சரித்திர நவீனங்களைப்போலவே சமுதாய நாவல்களும் (அலைஓசை, மகுடபதி, கள்வனின் காதலி முதலியன), வீரமும் காதலும் நாட்டுப்பற்றும் விளங்கப்பெற்றும், பெரும்பாலும் நிலைமைக்கும் பாத்திரத்துக்கும் ஏற்ற நடையில் அமைந்தும், வாசகரை ஈர்க்கின்றன. தமிழைக் கொச்சைப்படுத்தாமல், அதேபோதில் தனித்தமிழின் பெயரால் நெரடான அருஞ்சொற்களை நாடி ஓடாமல், தூய்மையும் உணர்ச்சியும் உயிர்த்தளிர்ப்பும்கொண்ட பழகு தமிழில் எழுதிய பெருமை கல்கிக்கு உரியது.

கல்வியால் பண்பட்ட உள்ளத்தின் கனிவுக்கும் விரிவுக்கும் எடுத்துக்காட்டாக விளங்கினர் கல்கி. அவருக்கு இயல்பாக அமைந்த நகைச்சுவைத் திறன், உணர்ச்சி முனைப்பால் உருவாகும் வெறிக்கு இடம்கொடாதவாறு அவரைக் காத்தது. நிதானம் தவருத விவேகத்தின் நிறைகுடமாக அவர் விளங்கினர். அவரது கொள்கையிலோ, படைப்புக்களிலோ என்ன குறை இருந்தபோதிலும், தமிழை லாகவமாகப் பல துறைகளில் ஆண்ட எழுத்தாளன் என்ற முறையிலும், கனிவும் தெளிவும் உடைய மானுடன் என்ற முறையிலும், கல்கி வகித்த பாத்திரம், ஆற்றிய தொண்டு, ஒப்புயர்வில்லாதது.

## ஆராய்ச்சியில் வல்ல வையாபுரிப்பிள்ளை

தமிழ் இலக்கிய ஆராய்ச்சியில் தம் வாழ்நாளை ஈடுபடுத்திய பெரியார் வையாபுரிப்பிள்ளை. பண்டைய புலவர்களைப் பற்றிய பௌராணிகச் செய்திகளையெல்லாம் சரித்திர உண்மைகளாகக்கொண்டு தமிழ் உலகம் தடுமாறியபோது, அந்தக் குழப்பத்தை நீக்க அரும்பாடுபட்ட பெரியோர்களில் முன்னேடியானவர் பேராசிரியர் சிவராஜப்பிள்ளை; முக்கியமானவர் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை. "உண்மையைவிட உயர்ந்ததொன்றில்லை" என்ற குறிக்கோளில் வையாபுரிப்பிள்ளை அவர்களுக்கு இருந்த பிடிப்பும், எதிர்ப்பையும் இடர்களையும் கண்டு அஞ்சாத அவரது நெஞ்சுரமும், நூலாராய்ச்சியில் அவர் உழைத்த உழைப்பும் வியத்தற்குரியவை. அன்னரின் முடிவுகளது விவரங்களில் கருத்து வேற்றுமைகட்கு இடமுண்டு; ஆனல் தமிழிலக்கிய வரலாற்றின் பொதுவான போக்கினைப் பிள்ளையவர்கள் நன்கு வரையறுத்துள்ளார்களென்பதை எவரும் மறுப்பதற்கில்லை. ஐயரவர்கள் பழந்தமிழ் நூல்களைத் தேடித்தந்தார்களென்ருல் பிள்ளையவர்கள் அவற்றைக் காலமுறைப்படி நிர்ணயம் செய்வதற்கு பேருதவி செய்துள்ளார்கள். எனவே, நாம் முறையான வரலாற்று அறிவினைப் பெறு

வதற்கு இவர்களிருவரும் ஆற்றிய தொண்டு மகத்தானது. ஒவ்வொரு சொல்லையும் சுண்டிப் பார்த்த பிள்ளையவர்களது அசுரப் பணியே 'தமிழ் லெக்சிகனை' உருவாக்கியது. சொற்கலை விருந்து, இலக்கணச் சிந்தனைகள் என்ற கட்டுரைத் தொகுதிகள் அவரது மொழி இயல் புலமைக்குச் சாட்சியாகும். தமிழ்ச்சுடர் மணிகள், தமிழர் பண்பாடு, இலக்கிய உதயம், இலக்கிய தீபம், கம்பன் காவியம், காவிய காலம் முதலிய அவரது நூல்கள் கால ஆராய்ச்சிக்கு உதவுவதோடு, முற்கால, தற்கால இயக்கியங்களைப் பற்றிய பல விமர்சனக் கருத்துக்களையும் கொண்டிருக்கின்றன.

## பாரதி மண்டலக் கவிஞர்கள்

பாரதி பரம்பரையில் வந்த கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் கவிதைகள் எளிமை, தெளிவு, இனிமை உணர்ச்சி ஆகிய பண்புகளால் சிறந்துள்ளன. இவரது மலரும் மாலையும் குழந்தைகள் உள்ளத்தைக் கவரும் உயரிய இலக்கியம். புத்தபிரானைப் பற்றி எட்வின் ஆர்நால்ட் எழுதிய ஆங்கிலக் கவிதையில் ஊறித் திளைத்த கவிஞனது உள்ளத்தில் முகிழ்த்தது ஆசிய ஜோதி. அதன் சில பகுதிகள் அரிய கவித்துவம்பெற்றுப் பொலிகின்றன. உமர்கய்யாம் பாடல்கள் என்ற பெயரில் அவர் எழுதிய பாடல்கள் அந்தப் பாரசீகக் கவிஞனது நூலின் ஆங்கிலத் தழுவலைப் பயின்றபின் உருவானவை; ஆயினும் அவரது அனுபவத்தில் பிறந்தவையாகவே அவற்றைக் கருதவேண்டும். ஆங்கிலத் தழுவலின் நம்பிக்கை வறட்சி, இந்தியப் பண்பாட்டில் ஈடுபட்ட கவிமணியைச் சிறிதும் பாதிக்கவில்லை.

வெய்யிற் கேற்ற நிழலுண்டு;
வீசுந் தென்றல் காற்றுண்டு;
கையிற் கம்பன் கவியுண்டு;
கலசம் நிறைய மதுவுண்டு;

தெய்வ கீதம் பலவுண்டு ;
தெரிந்து பாட நீயுண்டு ;
வையந் தருமிவ் வன மன்றி
வாழும் சொர்க்கம் வேறுண்டோ ?

என்பனபோன்ற பாடல்கள் அவரது கவிதையின் சுவைக்கும் அழகுக்கும் சான்ருகும். கவிமணியின் நாஞ்சில் நாட்டு மருமக்கள்வழி மான்மியம் சிறந்த ஹாஸ்யக் கவிதையாகும்.

பாரதியின் கவிதா மண்டலத்தைச் சேர்ந்தவராகவே பாரதிதாசன் கவிதை இயற்றத் தொடங்கினுர். மென்மையும் இனிமையும் அமைதியும் நிறைந்த கவிமணியின் கவிதைக்கு மாருக, வீறும் வேகமும் கொண்டதாக அமைந்தது பாரதிதாசன் கவிதை. அவர் முதலில் இயற்றிய கவிதைகள் (சஞ்சீவி மலைச்சாரல், புரட்சிக் கவி முதலியன), மிகுந்த நம்பிக்கையை உண்டாக்கின. ஆனுல் மன எரிவையே பாட்டாகப் பாடிக்கொட்டும் தன்மையராக அவர் மாறியதால் அந்நம்பிக்கைகள் தகர்ந்தன. சாது சுப்பிரமணிய யோகியின் அகல்யா கம்பனை நினைப்பூட்டும் சொல்லாட்சியால் சிறப்புற்றதாகும். காந்தீயப் பாடல்களைப் பாடியதாலேயே விடுதலைப் போராட்டக் காலத்தில் சிறப்பெய்திய நாமக்கல் இராமலிங்கம் பிள்ளையிடம் கவித்துவத்தைக் காண்பது அருமை. பல இளங் கவிஞர்களது பரிசோதனைக் களமாக இன்றைய கவிதை உலகம் காட்சி தருகிறது. உண்மையான கவிதைகள் இனித்தான் பிறக்கவேண்டும்.

வசன கவிதைத் துறையில் பாரதியின் சிறப்பான முயற்சியைத் தொடர்ந்து, கு. ப. ராஜகோபாலன் எழுதிய வசன கவிதைகள் குறிப்பிடத் தக்கவை. யாப்பிலக்கணத்தின் கட்டுத் திட்டத்திலிருந்து கற்பனையாற்றல் விடுபடவேண்டுமென்ற வேட்கையில் பிறந்தது வசன கவிதை. இத்துறைக்கு முன்மாதிரியாகத் திகழ்பவர், புல்லின் இதழ்கள் முதலிய ஆங்கிலக் கவிதைகளை இயற்

றிய அமெரிக்கக் கவிஞன் வால்ட் விட்மன் ஆவார். ஆனால் வசன கவிதையும் ஓர் இலக்கிய கலை என்பதை உணர்ந்தும், மோசமான உரை நடையாகச் சிறுமை யாகாது வசன கவிதையை படைக்கவேண்டுமென்ப தைத் தெரிந்தும், இத்துறையில் பரீட்சை செய்வோரை இன்றைய தமிழகத்தில் காண முடியவில்லை.

## சிறுகதை

சிறு கதைத் துறை சிறப்பான ஏற்றம் காண்பதற் கான அறிகுறிகள் தோன்றின. ''மங்கையர்க்கரசியின் காதல் முதலிய சிறுகதைகள்'' என்ற வ. வே. சு. ஐயரின் படைப்பு, சிறுகதை அமைப்புக் கலைக்கு முன்மாதிரியாக அமைந்தது. இக்கலையில் வல்லவராக விளங்கியவர் புதுமைப்பித்தன். அவரது சொற்செட்டும், தத்ரூபமான உரையாடல்களும் உயிர்த்தளிர்ப்பான வர்ணனைகளும் போற்றத்தக்கவை. வாழ்வில் காலூன்றி நின்ற மனிதாபி மானியே என்றாலும், மனக்கசப்பும் அவநம்பிக்கையும் அவரது பார்வைக்கு ஊறு செய்தன. புதுமைப்பித்த னோடு மணிக்கொடியில் பணிபுரிந்த கு. ப. ரா. சொல்ல வேண்டிய விவரங்களைத் தேர்ந்தெடுப்பதிலும், சொல் லாட்சியிலும், உயிருள்ள பாத்திரங்களைப் படைப்பதிலும் வெற்றி கண்டார். இன்று சிறுகதைத் துறை பல்கிப் பெருகியுள்ளது; ஆனால் தரமான சிறுகதை எழுதுவோர் மிகச்சிலரே.

## நாவல்

''முதற்கோணல், முற்றுங்கோணல்'' என்ற பழ மொழிக்குச் சாட்சியாகவே நாவல் துறை விளங்குகிறது என்ற கணிப்பு பெரும்பாலும் உண்மையே. பிற்கால இலக்கிய வரலாற்றாசிரியன், நூறாண்டுக்கு முன் தோன் றிய கமலாம்பாள் சரித்திரத்தையும் பத்மாவதி சரித்திரத் தையும் சிறப்பான முதல் முயற்சிகளாகக் குறிப்பிடு வான்; வடுவூர் துரைசாமி ஐயங்கார், வை. மு. கோதை

நாயகி அம்மாள் முதலியோர் நாவலின் பெயரால் பொழுதுபோக்குக் கதைகளை எழுதிக் குவித்ததைப் புறக்கணித்துவிட்டுக் கல்கியைக் குறிப்பிடுவான்; அவரது பாத்திரப் படைப்பிலும் கதை வளர்ச்சியிலும் உள்ள குறைகளைப் புலப்படுத்திவிட்டு, தெளிவும் ஆற்றலும் கவர்ச்சியும் வாய்ந்த உரை நடையால் அந்நாவல்கள் புகழ்பெற்றதை விளக்குவான்; அதன் பின், நகைச் சுவைச் சிறப்பாலும் பேச்சு வழக்குகளைப் புலப்படுத் தும் உரையாடல்களாலும் தேவனும் எஸ். வி. வி.யும் எழுதிய சில நாவல்கள் சிறப்பதைப் போற்றுவான் வருங் கால ஆசிரியன். நாளாவட்டத்தில், பக்தி நோக்கின் பகட்டாரவாரத்தால் தேவனுக்கும் பழமை போற்றும் பிரசார முனைப்பால் எஸ். வி. வி.க்கும் நகைச்சுவை குலைந்து கலைத்திறன் குன்றியதை அவன் குறிப்பிடுவான். அதன்பின் (1962 வரையில்) அத்திப்பூ பூத்தாற்போல் சில நல்ல நாவல்களே வெளிவந்தன என்று வருந்துவான்.

தனி மனிதனது முழுவாழ்வை வெளியிடுவதில் நாவலை விஞ்சும் துறையில்லை. ஒளிவு மறைவாயுள்ள அக உலக ஓட்டங்களைத் துல்லியமாகப் புலப்படுத்தும் தனித்திறன் நாவலுக்கே உரியது என்று புகழ்பெற்ற ஆங்கில நாவலாசிரியர் ஈ. எம். பார்ஸ்ட்டர் கூறுவது முற்றிலும் உண்மையே. பலவகையான மாந்தரோடும் ஒன்றிப் பழகும் திறம் பெற்றவனும், வாழ்வின் பல துறைகளையும் ஊடுருவி நோக்கி உண்மையை உணரத் தக்கவனும், செழுமையான மனோபாவனைக்கு உரியவனு யும் உள்ள ஆசிரியனே அத்தகைய நாவல்களைப் படைக்க முடியும். இன்று நாவலென்று நடமாடும் படைப்புக் கள் பெரும்பாலும் அப்பெயருக்குத் தகுதி பெறாதனவே.

## நாடகம்

இயற்கையான எளிய தமிழில் மனோகரா, லீலாவதி-சுலோசனா முதலிய பல நாடகங்களைப் படைத்து நாட

கத்துக்குப் புத்துயிர் அளித்தவர் பம்மல் சம்பந்த முதலியார். அவர்கள் வடமொழி, ஆங்கில நாடகங்களை ஒட்டியும் பல நாடகங்களைச் செய்திருக்கிறார்கள். பாடல்கள் நிறைந்த பல நாடகங்களைத் தயாரித்த சங்கர தாஸ் சுவாமிகளை நாடகத் தலைமை ஆசிரியரென்று நடிகர் உலகம் போற்றும். ரங்கராஜுவின் சந்திரகாந்தா, வடுவூர் துரைசாமி ஐயங்காரின் மேனகா முதலிய கதைகளை நாடகங்களாக்கினார். எம். கந்தசாமி முதலியார் என்ற பெரியார். சுதந்திரப் போராட்டத்தில் தமிழ் நாடக மேடையை ஈடுபடுத்துவதில் தேசபக்தர் தெ. பொ. கிருஷ்ணசாமிப் பாவலரது நாடகங்கள் சிறந்த பங்கு பற்றின. கதரின் வெற்றி, தேசபக்தி, தேசியக் கொடி முதலிய பாவலர் நாடகங்கள் தமிழ் மக்களுக்கு விடுதலை ஆர்வத்தை புகட்டின. பதிபக்தி, பம்பாய் மெயில் முதலிய சமுதாய நாடகங்களை எழுதியதும் பாவலரே. எஸ். டி. சுந்தரம் எழுதிய கவியின் கனவு, கு. ச. கிருஷ்ணமூர்த்தியின் அந்தமான் கைதி முதலியவையும் குறிப்பிடத் தக்கவை.

மனோன்மணியத்துக்குப் பிறகு குறிப்பிடத்தக்க இலக்கிய நாடகம் யாதுவும் தோன்றவில்லை. சாகுந்தலத்தை மறைமலையடிகளும், மண்ணியல் சிறுதேர் என்ற பெயரில் மிருச்சகடிகத்தைப் பண்டிதமணி கதிரேசச் செட்டியாரும், ஷேக்ஸ்பியரின் ஜுலியஸ் சீஸரை டி. என். சேஷாசலமும் தமிழில் ஆக்கினார்கள். நாடக உணர்வோ, உயிர்த் துடிப்போடு தமிழ் எழுதும் ஆற்றலோ இல்லாதவர்கள், முறையாகத் தமிழ் பயின்று பட்டம் பெற்றிருப்பதாலேயே, நாடகங்களைத் தமிழிலாக்கலாம் என்ற கருத்தின் தவற்றை அண்மைக் காலத்தில் வெளியான பல நாடக மொழிபெயர்ப்புகள் புலப்படுத்துகின்றன.

சமீபகாலத்தில், மணிக்கொடி எழுத்தாளரான பி. எஸ். ராமையாவும் வேறு சிலரும் நாடகமேடைக்

கேற்ற தரமான நாடகங்களை எழுதி வருவதால், நாடகக் கலை மீண்டும் வளம்பெறுமென்ற நம்பிக்கை தளிர்த்திருக்கிறது.

## கட்டுரை இலக்கியம்

கட்டுரை இலக்கியத்தில், ரஸிகமணி டி. கே. சி. ஆற்றிய தொண்டு பெரிது. அவர் வ வே. சு. ஐயரைப் போன்ற திறனாய்வாளர் அன்று. ஆனால் ஓசை, தாளம், அழுத்தம் முதலியவற்றை விளக்குவதன் மூலம் கம்பன் பாடல்களது ஜீவனை உணரச்செய்த பெருந்தகை அவர். ஒவ்வொரு பாட்டுக்கும் ஏற்ற அடிநிலம் அமைத்து விளக்கம் தரும் அவர்தம் தனித்திறனை 'இதய ஒலி'யில் காணலாம். பேச்சு நடையில் அமைந்த அவர்தம் எழுத்து அலாதியான கவர்ச்சியினை உடையது. மாணிக்க வாசகர் வரலாறும் கால ஆராய்ச்சியும், பட்டினப்பாலை ஆராய்ச்சி, முல்லைப் பாட்டு ஆராய்ச்சி முதலிய நூல்கள், மறைமலை அடிகள் இயற்றியவை ஆகும். அவை ஆராய்ச்சி மாணவர்க்குப் பயன்படுவன. பிற மொழிக் கலப்பின்றித் தூய தமிழே எழுதவேண்டுமென்ற இயக்கம் அவர் தோற்றுவித்ததே. அவரது நடை தெளிந்ததே ஆயினும், உணர்ச்சி மிகுதியாக இல்லாததால், பயில்வோருக்குச் சற்றுச் சிரமமானதே. ரா. இராகவையங்கார், மு. இராகவையங்கார், கா. சுப்பிரமணியப் பிள்ளை. முதலிய புலவர்கள் எழுதிய நூல்கள் இலக்கிய வரலாற்று ஆராய்ச்சிக்குப் பயன்படுவன. டாக்டர் ஐயருக்கும் திரு. வி. க. வுக்கும் பின்னர் தமிழ்ப் புலமை உலகுக்குத் தனித் தலைவனாகத் திகழ்வதுடன் மொழி இயல் வல்லுநராகவும் விளங்கும் பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், திருக்குறளைப் பற்றியும் சிலப்பதிகாரத்தைப் பற்றியும் எழுதியுள்ள ஆராய்ச்சி நூல்கள் அரிய கருத்துக் கருவூலங்களாகும். தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமை பெற்ற டி. என். சேஷாசலம் அவர்களது கம்பராமாயணக் கட்டுரைகளும் கலா

நிலையம் என்ற ஏட்டில் எழுதிய தலையங்கங்களும் இரு மொழி அறிஞருக்குப் பெருவிருந்தாகும். உரைகளைக் கருதுங்கால், வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியாரின் கம்பராமாயண உரையும், வெள்ளக்கால் சுப்பிரமணிய முதலியாரின் கம்பராமாயண இன்கவித் திரட்டு உரையும், வேங்கடசாமி நாட்டாரது சிலப்பதிகார உரையும், பண்டிதமணி கதிரேசன் செட்டியாரது திருவாசக உரையும் குறிப்பிடத்தக்கவை. பண்டிதர்களது புரியாத நடையைக் கண்டனம் செய்த வ. ரா. துடிப்பான எளிய நடையில் சீர்திருத்தக் கருத்துக்களை வழங்கினர். அவரது நாவல்களைக் காட்டிலும் சுவையானவை அவர் எழுதிய வாழ்க்கைச் சித்திரங்கள். பாரதியாரின் வரலாற்றைச் சிறப்பாக எழுதிப் பாரதிபுகழ் பாடிய வ. ரா. புதுமைப் பித்தன் முதலிலோருக்கு அளித்த ஊக்கம் பெரிது.

தமிழ் நாட்டு வரலாற்று ஆராய்ச்சி நூல்களில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை: 1800 ஆண்டுக்கு முற்பட்ட தமிழர் (கனகசபை பிள்ளை அவர்கள் எழுதியது); சோழர்கள், பாண்டியர்கள் என்ற பெரு நூல்கள் (சரித்திர மேதை கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் எழுதியவை); பிற்காலச் சோழர் வரலாறு, பாண்டியர் வரலாறு என்பன (கல்வெட்டு ஆராய்ச்சியில் வல்லவரான சதாசிவப் பண்டாரத்தார் எழுதியவை). பண்டாரத்தாரின் நூல்கள் தமிழிலும் பிற ஆங்கிலத்திலும் எழுந்தன. பி. டி. சீனிவாச ஐயங்காரும் எம். சீனிவாச ஐயங்காரும் ஆங்கிலத்தில் எழுதிய வரலாற்று நூல்களும் குறிப்பிடத் தக்கவை. ஆங்கிலம் மூலம் தமிழ்த் தொண்டு புரிந்த வேறு இரு பெரியார்களை இங்குக் குறிப்பிடல் ஏற்புடைத்தாகும். ஒருவர், தீவிர தேசபக்தரும் 'கம்பராமாயண ரசனை' மூலம் தமிழ் இலக்கிய விமர்சனத்துக்கு அடி எடுத்துக் கொடுத்தவருமான வ. வே. சு ஐயரவர்கள். அவர் திருக்குறளை ஆங்கிலத்தில் அருமையாக மொழிபெயர்த்திருக்கிறர்; கம்பராமாயணத்தின்

திறனுய்வைப் பல பாட்டுக்களின் ஆங்கில ஆக்கத்தோடு இயற்றியுள்ளார். வரலாற்று முற்காலத்தைப் பற்றி ஆங்கிலத்தில் நூல் எழுதிய இராமச்சந்திர தீட்சதர் திருக்குறளையும் சிலப்பதிகாரத்தையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறார்.

## இன்றைய இலக்கிய விமர்சனம்

இலக்கிய விமர்சனத் துறையின் திருந்தா நிலை இன்றைய அவல நிலைக்கு எடுத்துக்காட்டு ஆம். நீண்ட விரிவுரைகளை எழுதுவதும், சுருங்கிய கருத்துரைகளை வழங்குவதும், உயர்வு நவிற்சியாகப் புலவர்களைப் புகழ்வதும், மேனாட்டுத் திறனாய்வாளரது கருத்துக்களைப் பொதுப் படையாக எடுத்து எழுதுவதும் திறனுய்வாக வெளிச்சம் போடுகின்றன. மேனாட்டு இலக்கியங்களைக் கற்று அனுபவித்து, அதன் அடிப்படையில் மேனாட்டு விமர்சனங்களைப் பயின்று, அறிவையும் உள்ளுணர்வையும் வளப்படுத்திக்கொள்வது நற்செயலே ஆகும்; அவ்வாறு திருத்திய நலம் படைத்தவர் தமிழ் இலக்கியத்தில் ஈடுபட்டுத் திறனுய்வு செய்வது தமிழுக்கு ஊற்றம் தரும். மாறாக, பிராட்லி போன்ற விமர்சனப் புலவர்களது கருத்துக்களைக் கடன் வாங்கி, அவற்றின் வழியில் தமிழ் இலக்கியப் பாத்திரங்களைச் செயற்கையாக விமர்சிப்பதே நயத்தக்க திறனுய்வாகக் காட்சி தருகிறது. தமிழ்ப் பத்திரிகைகள் புத்தக விமர்சனத்தைப் புறக்கணிப்பதிலும், புத்தக விமர்சனத்தின் பெயரால் தமிழ், ஆங்கில ஏடுகளில் வரும் சில குறிப்புக்களும் பெரும்பாலும் பதிப்பகத்தார் விளம்பரம்போலவோ நுனிப்புல் மேய்வதாகவோ அமைவதிலும், இலக்கிய விமர்சனத்தின் தாழ் நிலையினை ஓர்ந்துணரலாம். உண்மையான அனுபவத்தின் முத்திரையுடன், மனத்தில் எழுந்த கருத்துக்களைத் தயங்காது கூறும் நேர்மையுடன், திறமான விமர்சனம் செய்யும் நூல்களைக் காண்பது அருமையாகவே உள்ளது.

## தீய போக்குகள்

தற்கால இலக்கிய அரங்கைப் பொதுவாக நோக்குங்கால், பல தீய போக்குகள் தலைதூக்கியிருப்பதைத் தேர்ந்து தெளியலாம். எழுத்தாளரும் நூல்களும் பல்கிப் பெருகியுள்ளபோதிலும், படைப்பாற்றல் ரொம்பவும் குன்றிவிட்டதென்பது கண்கூடான உண்மை. சிறுபிள்ளைத்தனமான காதற் கதைகளும், உணர்ச்சி முனைப்பான குடும்பக் கதைகளும் அரைவேக்காட்டு வரலாற்று அறிவின் அஜீரணத்தில் உதித்த பரபரப்பான சரித்திரக் கதைகளும் பெருவழக்காகிவிட்டன. அனுபவமிலலாதவர்கள் அனுபவமில்லாதவர்கட்குப் பொழுதுபோக்கினைக் கருதி எழுதுவதெல்லாம் இலக்கியமாகக் கருதப்படுகிறது இது ஒரு தீயபோக்கு. இரண்டாவதாக, கருத்தை நேராக உணர்த்தும் ஒளிவாக்கே உரைநடை என்பது போய். எதுகை மோனைகளைத் தேடித்தொடுத்த பொய்க்கால் நடையின் பகட்டிலே கருத்தை (அல்லது கருத்து சூன்யத்தை) மறைப்பதே வசனம் என்ற எண்ணம் ஓங்கிவிட்டது. மூன்றாவதாக, அனுபவத்தில் திளைத்த கவிஞனது மனோபாவனையின் எழுச்சியில், அவசமுற்ற நிலையில், கவிஞனது இதயத்தின் அடிவாரத்திலிருந்து ('வயிற்றின் குழியிலிருந்து' என்பான் கீட்ஸ்) பீறிட்டுக் கொண்டு கிளம்பும் உணர்ச்சிகளை வடித்துத் தருவதே கவிதை என்பதுபோய், செயற்கையாகச் சொல் ஜாலம் செய்வதே கவிதை என்ற கருத்து ஓங்கிவிட்டது. நான்காவதாக, குன்றிய வட்டத்தில் தடுமாறும் போலிப்பற்றும் வீராப்பும் சேர்ந்து வெறியின் கோரமாக வடிவெடுத்துள்ளதைக் குறிப்பிட வேண்டும். அகில உலகத்தையும் தோழமையுடன் தழுவும் இந்தியத் தேசியத்தின் உள்ளமைப்பாகத் தமிழ்ப்பற்றும் தமிழ் நாட்டுப் பற்றும் விளக்கம் பெறச் செய்தான் பாரதி. வழி வழி வந்த கருத்தோட்டமும் அதுவே. ஆனல் பிரிட்டிஷ் ஏகாதிபத்தி

யத்தின் பிரித்தாளும் சூழ்ச்சியில் பிறந்த ஆரிய—திரா விடப் பிரச்னேயும், அதன் வழி வந்த வடமொழி வெறுப் பும் இந்தி ஏகாதிபத்தியப் பூச்சாண்டியும், வடக்கு வாழத் தெற்குத் தேய்கிறதென்ற ஆதாரமில்லா ஒப்பாரியும் சேர்ந்து, பிரிவினே இயக்கத்தையும் தமிழ்மொழி வெறி யையும் படைத்துள்ளன. இதற்கேற்றவாறு வரலாறு திரித்துப் புரட்டப்படுகிறது. தனித் தமிழின் பெயரால் நடக்கும் இயக்கம் இதன் பல விளைவுகளில் ஒன்று. புலவர் சிலரின் தனித் தமிழ் கிளர்ச்சிக்கு ஆதரவு தரும் அரசியல் வாதிகளே, மக்களை அணுகும்போது, தெளிவு கருதியோ, வேகம் கருதியோ, கவர்ச்சி கருதியோ, பழகிய வடசொற்களைச் சரளமாக ஆள்வதிலிருந்தே அவர்களது தனித் தமிழ்க் கோரிக்கையின் போலித் தன் மையைப் புரிந்து கொள்ளலாம். ஐந்தாவதாக, மொழி வெறிச் சூழலில், படைப்பாற்றலும் உயிர் துடிப்போடு எழுதும் திறமையும் இல்லாத பண்டிதர் சிலரும் எழுத் தாளராக ஏற்றம் பெற முடிகிறது. ''அமிழ்தினுமினிய தமிழென்னும் தனிநிலைச் செம்மொழியின் வளமும் செழிப்பும் என்னே! என்னே!'' என்று வாசாலகம் செய்யும் வெற்று ஆரவாரமும், அரைத்த மாவினே அரைப்பது போல், பழம் புலவர்களது பொழிவுகளின் பிழிவுகளை வழங்குவதும், அன்னாரின் ஆற்றல் இலக்கியப் படைப்பாகவும் தன்னேரில்லாத் தமிழ்த் தொண்டாகவும் கருதப்படுகின்றன. ஆருவதாக, மகத்தான காரியத்தைச் செய்கிருேமென்ற மமதை, விமர்சனத்தைக் கண்டால் நெற்றிக் கண்ணைத் திறக்கிறது. திறனாய்வில் கொள்ளு வன கொண்டு தள்ளுவன தள்ளும் அடக்கத்தை, அகந் தையின் சிகரத்தில் இறுமாந்திருப்பவரிடம் எப்படி எதிர்பார்க்க முடியும்? ஒரு பெரும் புலவரின் உரை நடையினே ஓர் அறிஞர் விமர்சனம் செய்தாரென்பதற் காக, அந்த அறிஞரைக் கண்டித்துத் தமிழகமெங்கும் கிளர்ச்சி நடத்தவும் துணிந்தது ஒரு புலவர் நிறுவனம். கருத்து வேற்றுமையைச் சகிக்க முடியாது கனன்று

எழும் இக்கொடுஞ் செயல் தமிழ் இலக்கிய வரலாற்றுக்கே புதுமையாகும்.

மேற்சொன்ன தீய போக்குகள் தமக்குத் தாமே இறுதி சூழும் தன்மையன. பகட்டும், போலியும், பொய்க்கால் நடையும், அரைத்த மாவை அரைத்தலும், வெற்று வீரமும், நுனிப்புல் மேயும் சோம்பலும், அனுபவமின்மையும் நீண்ட காலத்துக்குப் பெயர் சொல்ல முடியாது. ஆயினும், உண்மை நிலையை உணர்ந்தவர்கள், இன்றுபோல் அஞ்சியும் சிதறியும் மெத்தனமாயும் இல்லாது தமது கடமையை ஆற்றினுல், இப்புன்மைகளை விரைவில் களைத்தெறிவதுடன், வளமார்ந்த இலக்கியத்தைப் பல துறைகளிலும் படைப்பதற்கான சூழலைத் தோற்றுவிக்க முடியும். பல பணிகளுக்கிடையே மூன்று மிகவும் முக்கியமானவையாக உள்ளன. முதலாவதாக, முறையான வரலாற்றுப்பார்வையுடன் தமிழர்களது இலக்கியத்தையும் பண்பாட்டையும் விளக்கும் நூல்களைப் படைப்பதாகும். அவையே ஆகிவந்த அனைத்திந்திய ஒற்றுமையை உணர்த்தியும் இந்திய பாரம்பரியத்தில் தமிழர்களது கொடைகள் வகிக்கும் பாத்திரத்தினை புலப்படுத்தியும், குறுநெறியின் வெறியிலிருந்து தமிழ் மக்களைப் பாதுகாக்கும். இரண்டாவதாக, இலக்கியத் திறனுய்வுக்கலை வளர வேண்டும். அச்சுறுத்தும் ஆர்ப்பாட்டத்துக்கு அடிபணியாது, இலக்கிய மனச்சாட்சியின் காவலன் என்ற உணர்வோடும் நெஞ்சுரத்தோடும் நேர்மையாக விமர்சனம் செய்யும் கலை வளரவேண்டும், எழுத்தாளனிடம் பரிவு காட்டுவது குறையல்ல, பாராட்டத்தக்க சால்பே. ஆனுல் பரிவின் பெயரால் மனம் ஒன்ருக சொல் வேருென்ருக அமைவது கொடிது. இன்னமைதியோடும் நன்னயத்தோடும் சொல்வதை உறுதியாகவும் ஆணித்தரமாகவும் சொல்ல வேண்டும், நல்லனவற்றையும் அல்லனவற்றையும் இனம் காணும் திறத்தோடு, கல்வியில் பண்பட்ட கனிவோடு, கருரான

விமர்சனம் செய்யும் கலேயே, ஆழ்ந்த அனுபவத்துடன் எழுதுவோருக்கு ஊக்கம் அளிப்பதுடன் வேறு பலரையும் திருத்துவதற்கும் உதவும். இவ்வாறு ரஸனேத் திறனேயும் அறிவின் தரத்தையும் உயர்த்துவதற்குத் திறனுய்வாளர்கள் விடாமுயற்சியுடன் பாடுபட்டாலன்றித் தமிழ் இலக்கியம் புதிய திருப்பத்தைக் காணமுடியாது; நவநவமான பொருள்களேயும் நடைகளேயும் யுத்திகளேயும் படைத்துக் கொண்டு முன்னேறும் கனவெல்லாம் நனவாகாது. மூன்ருவதாக, பொருளாதாரம், விஞ்ஞானம் முதலானவற்றைப்பற்றி விறுவிறுப்பான, தெளிந்த நடையில் விதவிதமான நூல்கள் வெளிவர வேண்டும். உலக வழக்கிலுள்ள சொற்களே விடுத்துத் தூய தமிழின் பெயரால் நெரடான சொற்களே நாடி ஓடாது, தெளிவுக்கும் திட்பத்துக்கும் ஏற்ற சொற்களே ஆண்டு இலக்கியச் சுவையோடு கூடிய அறிவு நூல்களேப் படைக்க வேண்டும். அதன் மூலம் தமிழ்மொழி புதிய ஆற்றலேப் பெறுவதுடன், வாசகர் கூட்டத்தின் அக்கறையைப் பெருக்க முடியும். அது சிறப்பான ஆற்றல் இலக்கிய வளர்ச்சிக்கும் வழிசெய்யும்.

# முடிவுரை

நமது முன்னோர்கள் அறிந்தவற்றிலும் சிந்தித்தவற்றிலும் சிறந்தவற்றை இலக்கியங்களிலிருந்து கற்றுக்கொள்கிறோம். நமது அரிய வைப்புநிதியங்களாக உள்ள பேரிலக்கியங்கள், மனிதகுல நேய உணர்ச்சியை உயிர்நிலையாகக் கொண்டிருக்கின்றன. அனைவரும் சரி நிகராக ஒத்துழைத்து வாழும் நவயுகத்தைக் காண வேண்டுமென்ற ஆவலைத் தூண்டி, அப்பணிக்கு ஏற்ற ஊக்கத்தையும் ஊற்றத்தையும் அவை அளிக்கின்றன.

கருவிலே திருவுடைய புலவன் என்ற பாராட்டுக்குரிய பெருமகனும் காலவரம்பினை முற்றிலும் கடந்துவிட முடியாதென்பது உண்மையே. கவிஞனது கற்பனை சமுதாய வாழ்வின் அனுபவத்தையே அடிநிலமாகக் கொண்டிருப்பதாலும், சமுதாயம் மாறி வருவதாலும், எந்தச் சிறந்த இலக்கியத்துக்கும் சில வரையறைகள் இருப்பதைத் தவிர்க்க முடியாது. ஆனால் சமுதாய வாழ்வின் அனுபவத்தில் திளைத்த இலக்கிய கர்த்தாவின் வளமார்ந்த மனோபாவனை தனிமையில் செயல்படும்போது, அவன் படைக்கும் இலக்கியம் அடிப்படையான மனித உணர்ச்சிகளை வெளியிடுகிறது; படிப்பவனைத் தூயனாக்கி உயர்த்துகிறது; வாழ்வின்பால் அவன் கொண்டுள்ள நேசபாசத்துக்கு உரம் அளிக்கிறது; தரணியில் வாழ்வோர் அனைவரையும் தோழராகக்

கொண்டு, அறவழிப் பிழையா அன்பு நெறியில் ஆற்றல் பெற்றவராக வாழ்வதற்கு வழிகாட்டுகிறது. பல்வகை மாந்தரைப் புரிந்து, குறையிடம் பரிவுகாட்டித் திருத்தியும், குற்றத்தைக் கடிந்து நீக்கியும், நிறைந்த வாழ்வு வாழ்வதற்குத் தெளிவும் சக்தியும் தருவதால்தான், பேரிலக்கியங்கள் காலத்தை வென்ற அமர சிருஷ்டிகளாகின்றன. எனவே இலக்கியப் பயிற்சியும் இலக்கிய ரஸனையும் மாந்தர்க்கு இன்றியமையாத ஒன்ருகிறது. இன்றைய சூழலில், நமது தேசியத் தன்னம்பிக்கைக்கு உரம் கூட்டவும், வெளிநாட்டுக் கலைச்செல்வங்களை நமது பண்பாட்டுக்குப் பொருந்திய முறையில் பயன் படுத்தவும், இந்தியப் பண்பாடு பன்மையில் கண்ட ஒருமையை உணர்ந்து ஏற்றம் பெறவும், தமிழ் இலக்கிய வளத்தை அறிவாற்றலோடும் கற்பனு சக்தியோடும் துய்க்கவேண்டும்.

நமது இலக்கியச் செல்வத்திலிருந்து துண்டித்துக் கொண்டு புதுமை இலக்கியத்தைப் படைக்கப்போவதாகப் பகர்வது புல்லறிவாண்மையாகும். இலக்கணமும் மரபும் ஒழிய வேண்டிய மூட நம்பிக்கைகள் என்பது ஆபத்தான அராஜகவாதமாகும். மறுபுறத்தில், இலக்கணமே காலத்துக்கு ஏற்றவாறு மாறுமென்பதைப் புரியாது, வளரும் தமிழைப் பண்டைய இலக்கணத்தின் கட்டுத் திட்டத்துக்குள் சிறைப்படுத்த முயல்வதும் கேடு சூழும் செயலாகும்.

தூய தமிழின் பெயரால் கண்மூடித்தனமான வடமொழி வெறுப்புக்கு ஆளாகின்றவர்கள் மொழி வளர்ச்சி நெறியினையும் தமிழ் வளர்ந்த முறையினையும் புறக்கிருர்கள். தமிழும் ஆரியமும் ஒன்றுக்கொன்று உதவி ஊற்றம் தந்திருப்பதை வரலாற்றில் தெளிவாகக் காணலாம். ஆரியத்தைக் குறிப்பிடும் சமஸ்கிருதம் என்ற சொல்லே செப்பம் செய்யப்பட்ட மொழி என்ற

பொருளைத் தரும். வேதமொழி சமஸ்கிருதமாக உருப் பெறுவதில் திராவிட மொழிக்குடும்பம் வகித்த பாத்திரம் பெரிது. சமஸ்கிருதத்தில் பல திராவிடச் சொற்கள் இடம் பெற்றன என்பது ஒன்று. சமஸ்கிருதத்தின் ஒலி இயலும் சொல்லுருவ இயலும் திராவிடமொழிகளுக்குப் பெரிதும் கடன்பட்டிருக்கின்றன என்பது இன்னொன்று. மூன்றாவதாகவும் முக்கியமானதாகவும் உள்ளது யாதெனில், வாக்கிய அமைதியில் தமிழும் சமஸ்கிருத மும் கண்ட ஒற்றுமைதான். இதன் விளைவாக, இந்திய மொழிகள் அனைத்துமே, முதலில் எழுவாய், அடுத்தபடி செயப்படுபொருள், இறுதியில் பயனிலை என்ற முறையில் வாக்கியங்களை அமைக்கின்றன. அனைத்திந்திய அறிவு மொழியாக விளங்கிய சமஸ்கிருதத்தைச் செப்பம் செய் வதில் தமிழ்நாட்டார் குறிப்பிடத்தக்க பாத்திரம் வகித் தனர். வடமொழிக்குத் தமிழ் ஊற்றமளித்ததைப் போலவே தமிழுக்கும் ஆரியம் ஆற்றலளித்திருக்கிறது. வடமொழி உறவால் தமிழுக்கு ஏற்பட்ட இனிமையை யும் லாகவத்தையும் நளினத்தையும் நாயன்மார்களது பாசுரங்களிலும் கம்பனது காப்பியத்திலும் பாரதியின் பாடல்களிலும் சிறப்பாகக் காண்கிறோம். இன்றியமை யாத வடசொற்கள் தகுந்த மாற்றங்களுடன் தமிழில் இடம் பெறும் மரபினைப் போற்றியே, தமிழ்ச் சொற்களை வகைப்படுத்திய தொல்காப்பியர் வடசொல்லைத் தனியே குறிப்பிட்டார். சமஸ்கிருதம், பாலி, பிராகிருதம் ஆகிய வற்றிடமிருந்து நம் முன்னோர்கள் கொண்டு ஆண்ட சொற்களை நிலைத்த வழக்காறுகிவிட்ட சொற்களை-நீக்க வேண்டுமென்பது தமிழ் வளர்ச்சிக்கே கேடு விளை விக்கும். திட்பம், தெளிவு முதலியவற்றையே முக்கிய மாகக்கொண்டு, ஒருவன் தன் ஆத்மகுணம் தோன்றவும் தனது நோக்கம் கைகூடவும், தகுந்த சொற்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்வான். இந்த உரிமையைப் பறித்துச் சொல்லாட்சியிலோ நடையிலோ அவனைக் கட்டுப்படுத்த முயல்வது கொடுங்கோன்மையே ஆகும்;

பொய்க்கால் நடையே அதன் தவிர்க்க முடியாத விளைவாக அமையும். மறுபுறத்தில், தமிழ் மரபுக்கு இசையாத வகையிலும், தேவை இல்லாமலும், அழகியல் உணர்ச்சியைப் புண்படுத்தும் முறையிலும், பிறமொழிச் சொற்களை ஆளும் போக்கு. தெளிவுக்கோ திட்பத் துக்கோ உதவாததுடன் இலக்கிய வளர்ச்சிக்கு ஊறு செய்வதாகும். முறையான இலக்கிய வளர்ச்சி ஏற் படும்போது, உயிருள்ள சொற்களோடு காலத்துக்கேற்ற புதுச் சொற்களும் சேர்ந்து, மொழி வளம்பெறுமென் பதே வரலாற்றின் படிப்பினை.

இதனைப் புரிந்தே பாரதி தமிழிலக்கிய மறுமலர்ச்சிக் குப் பெருந்தொண்டு புரிந்தான். நமது மொழி இந்திய தேசிய வாழ்வின் ஓட்டத்துடன் ஒன்றி வேகமும் வல்லமையும் பெற்று வளர்ந்தது. பழைய, இலக்கியப் பயிற்சி புதிய இலக்கியப் படைப்புக்கு ஆற்றல் தந்தது. நூல் வழக்கோடு உலக வழக்கையும் அறிந்து, எழுத் தாளர் தமிழுக்குச் சொல்வளம் கூட்டினர். ஆங்கிலம் ஆதிக்க மொழியாக வந்து இந்திய மொழிகளை ஒடுக்கிய தென்றாலும், தேசிய இயக்கம் ஆங்கிலத் தொடர்பையும் அதன் மூலம் கிடைத்த நவீன உலகத்துச் சிந்தனைச் செல்வத்தையும் மறுமலர்ச்சிக்குப் பயன்படுத்தியதால், இந்திய எழுத்தாளனது பார்வை புதிய விரிவையும் திட்ப நுட்பத்தையும் அடைந்தது.

தனி உண்மை (**Fact**) வேறு ; சத்தியம் (**Truth**) வேறு. ஒரு சில உண்மைகளை அடிநிலத்திலிருந்து துண்டித்துக் காட்டிப் படைப்பதெல்லாம் யதார்த்த இலக்கிய மாகாது. பார்க்கப்போனால், சத்தியத்துக்கு (முழு உண்மைக்கு) விரோதமாகவே அத்தகைய இலக்கி யங்கள் அமையக்கூடும். சாதி, சமய, பிரதேசக் குரோதங்களைத் தூண்டிவிடும் தீய போக்கும், இழிவான வகையில் பாலுணர்ச்சியைத் தூண்டிவிட்டு ஆன்மீக

ஆற்றலை அழிக்க முற்படும் கழிசடைப் போக்கும். இவ்வாறே சில தனி உண்மைகளைச் சூழலிலிருந்து துண்டித்து, மனம்போனபடி திரித்துப் புரட்டித் தொடுத்து 'இலக்கியம்' அமைக்கின்றன. கண்ணில் கண்டவாறே புகைப்படம் பிடிப்பதுபோல், சதையாயத்திலுள்ளதை வெளியிடுவதும் யதார்த்த இலக்கியமாகாது. கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்ற குறுநெறியில் படாது, அனுபவத்தோடு வாழ்வை ஊடுருவி நோக்கி, வளரும் அம்சங்களையும் தேயும் அம்சங்களையும் இனம் கண்டு, வளரும் அம்சங்களுக்கு எதிர்காலம் உரியதாக இருப்பதைக் கலை மயமாக்கிக் காட்டுவோனே, சமுதாய உண்மைகளின் சாரத்தை — சத்தியத்தை — உணர்ந்து வெளியிடும் ஆற்றல் இலக்கிய கர்த்தாவாகிருன்.

கல்வி நிலையங்கள், நூல் நிலையங்கள் ஆகியவற்றின் பெருக்கம், மொழிப்பற்றும் தேசிய ஆர்வமும் குடியாட்சி உணர்வும் சோஷலிஸ ஆர்வமும் வளர்ந்துவரும் சுற்றுணர்ச்சி, தமிழ் தமிழகத்தின் ஆட்சிமொழியாகும் சூழல், பல்கலைக் கழகங்களில் தமிழ் அடையவிருக்கும் ஏற்றம், பத்திரிகைகளுக்கும் புத்தகங்களுக்கும் உண்டாகியிருக்கும் பேராதரவு, இன்னோரன்ன காரணங்களால் இலக்கிய ரஸனை பெருகுவதற்கு ஏற்ற நிலைமை உருவாகிக் கொண்டிருக்கிறது. இது ஓர் அரிய வாய்ப்பு. ஆனால் சந்தடியே சாதனை என்ற ஒற்றைச் சாண் நினைப்பால் பகட்டாரவாரம் செய்யும் போக்கே இலக்கிய அரங்கில் ஆதிக்கம் வகிக்கிறது. இது பெரியதோர் ஆபத்து. ஆபத்தை நீக்கி வாய்ப்பினைப் பயன்படுத்திப் புதியதோர் பொற்காலத்தின் நுழைவாயிலை நெருங்குவதற்கு, பொறுப்புணர்ந்த எழுத்தாளர் படை பெருக வேண்டும். சங்க காலத்து லௌகிகப் பார்வை, சங்கம் மருவிய காலத்து நல்லொழுக்க நெறி, பக்தி இயக்க காலத்து ஆத்மவேகம், இவற்றையெல்லாம் ஜீரணித்து ஓங்கி வளர்ந்த கம்பனது சர்வ வியாபகப் பார்வை, இந்த

மரபில் காலூன்றியவாறே மேனாட்டு நவீன சிந்தனைச் செல்வத்தையும் தன்மயமாக்கிக்கொண்ட பாரதி சகாப்தத்தின் பேராற்றல் ஆகிய அனைத்திடமிருந்து வலுவும் வேகமும் விவேகமும் பெற்ற எழுத்தாளர்கள், கவிதை, கட்டுரை, சிறுகதை, நாவல், குழந்தை இலக்கியம், இலக்கிய விமர்சனம், நாடகம், இலக்கிய நலம் பெற்ற அறிவியல் நூல்கள் முதலியவற்றை நவநவமாகப் படைத்துத் தமிழன்னையின் மேனியைச் செழிக்கச் செய்வார்களாக!

வாழ்க தமிழ்!